Prescribed for S. S. L. C. Examination 1923. (C. Group.)

# ஜ ய ஸி ங் கு

வாழ்குடை, வேங்கடராம சாஸ்திரிகள்





கே. பழனியாண்டிபிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி, சென்னை.

1922

 [விலை அணா 8.

# ஜயஸிங்கு

வாழ்குடை, வேங்கடராம சாஸ்திரிகள்



கே. பழனியாண்டி பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.
1922



[விலை அணா 8

# முகவுரை

இந்தச் சிறிய புத்தகத்துக்குப் பெரிய முகவுரை வேண்டிய தில்லை. செஞ்சிக்கோட்டையை முதலிற் சேரரும், இரண்டாவது சோழரும், மூன்றாவது பல்லவருமாக ஆண்டுவந்திருக்கிறார்கள். பின்னர் அது கிருஷ்ணக்கோன் என்ற ஒரு யாதவமன்னவனுக்குச் சுவாதீனமாயிற்று. கமலக்கன்னி யென்ற மலைத்தெய்வம் அம்மலைக் குகையிற் சேமிக்கப்பட்டிருந்த மிகவும் பெரிய பொற்பதுமை யொன்றையும், நவமணித் திரள்களையும், பொற் கட்டிகளையும், அவனுக்குக் காண்பித்துச் சென்றது. இராஜகிரியின் அடிவாரத்தில் கமலக் கன்னியம்மன் கோவிலிருப்பதை இன்னமும் காணலாம். கிருஷ்ணக்கோன் தெய்வபக்தி யுள்ளவன். அவன் காலத்திற்றான் பல உயர்ந்த கட்டடங்களும், பெரிய பெரிய தேவாலயங்களும் பலமான மதிற்சுவர்களுமமைந்து செஞ்சிக்கோட்டை ஒப்புயர்வற்ற தாயிற்று. அவ்வரசன் அங்குள்ள ஒரு மலைக்குக் கிஷ்ணகிரியென்று பெயரிட்டு அதிற் சபாமண்டபமியற்றி அரசு செலுத்தி வந்தான். அப்புறம் ஐந்தாறு தலைமுறைவரையில் அவன் குலத்தினர் அதனை ஆண்டுவந்தார்கள். பிற்பாடு, விஜயநகரத் தரசர்களுக்கு அது சுவாதீனமாயிற்று.

கடைசியில், சூரலிங்கு என்ற ரஜபுத்திர வீரனொருவன் ஆக்பர் சக்ரவர்த்தியின் காலத்துக்குச் சற்று முன்பின்னாகச் செஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றி யாளத் தொடங்கினான். ஜயஸிங்கு அவன்வம்சத்தினன். இவன் கி-பி-பதினெட்டாம் நூற்றாண்டின் றொடக்கத்திலிருந்தவன். இவன் காலத்தில் டில்லிப்பட்டணத்தில் ஷாஆலம் என்பவர் சக்ரவர்த்தி.

ஜயஸிங்கு மன்னவன் சரித்திரம் சிறப்புப் பெற்றது. இது போன்ற வீரச்சுவை பொருந்திய சரித்திரம் நம்மிந்தியாவில் ஒன்று இரண்டுக்குமேல் இல்லை. இவனொழுக்கம் தூய்மையும் பெருமையும் பொருந்தியது. இன்னுமிவன் நீதி, நிதானம், பொறுமை, பேரறிவு முதலிய சிறந்த குணங்களுக்கு அருங்கலமானவன். உத்தம க்ஷத்திரிய தருமத்தை உண்மையிற் கைக்கொண்டவன். ஜயஸிங் கென்னும் பெயர் ஜேஸிங் கென்று மருவித் தமிழ் நாட்டில் தேசிங்கு என்று திரிந்திருக்கலாம். தொண்டை நாட்டிற் ஜயஸிங்கு மன்னவன் சரித்திரத்தைத் தெரியாதவர் இரார்.

மாணக்கர் வகுப்பில் வாசிக்க முடியாத இடக்கர் விஷயங்கள் இப்புத்தகத்தில் இருக்கவேமாட்டா. இது படிக்கும் சிறுவர்களின் எதிர்காலவாழ்க்கைக்கு இன்றியமையாத உற்சாகம், தூய்மை, உறுதி, கடமைமுதலிய உயர்குணங்களை அவர்க ளுள்ளத்திற் கிளப்பித் தேசாபிமானிகளாக்கிச் சிறப்பை யுண்டெண்ணுமென்பது துணிபு.



உ

# ஜயஸிங்கு

## அதிகாரம் 1

### செஞ்சிப்பட்டணம்

"எந்நாட்டுப் பெருவளமும் எவ்வெவர்கோட் பாடுகளும்
 இயம்ப வல்ல
பொன்னாட்டுப் பொன்செருக்கும் பன்னாக்குப் பணிச்செருக்கும்
 போக்கு மிந்த
நன்னாட்டைப் புலவரெலாம் தொண்டைநா டெனவுரைப்பர்
 ஞால மங்கை
தன்னாட்போ தனையமுகக் கனிவாயாம் காரணத்தின்
 சார்பாற் போலும்." சிவஞானமுனிவர்.

தொண்டைநாடு பல வுத்தம கவிகள் உதித்த நல்லிடம். பல சைவ வைஷ்ணவ சமயாசாரியரின் அவதாரத் திருப்பதி. பாடல்பெற்ற முப்பத்திரண்டு சிவாலயங்களும் இருபத்திரண்டு விஷ்ணு வாலயங்களும் விளங்குறு மரங்கம். பாலாறு, சேயாறு, பெண்ணையாறென்ற மூன்றாறுகளும் பெருகியோடும் பெரிய வளநிலம். சங்கப்புலவ ரியற்றிய சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படையென்ற மூன்று படைகளும் சேர்ந்து வாழ் வீடு. நானிலங்களும் அவற்றின் கரு வுரிப்பொருள்களும் பழுத்துக் கொழித்துச் செழிக்கும் பண்ணை. அத்

தொண்டை நாட்டைத் தமதாக்கிக் கொள்ளச் சிந்தை செய்யாத தேர்வேந்தர் முற்காலத்தில் ஒருவருமில்லை.

கதாரம்ப காலத்தில் அவ்வுயர்ந்த நாட்டில் செஞ்சிப் பட்டணம் சிறப்புப்பெற் றிருந்தது. அஃது உலகத்திலுள்ள மற்றெல்லா நகரங்களுக்கும் சிரோரத்தினமானது. அந்தப் பட்டணத்தில் எந்நாட்டு வளங்களும் நிறைந்து விளங்கின. அது தனது இயற்கை யமைப்பினாலும், செயற்கைச் சிங்காரத்தினாலும் எத்தனையோ பல வுத்தம கவிகளுக்குப் பொழுதுபோக்கையும் புலமை வளர்ச்சியையும் உண்டுபண்ணி வந்தது. அக்காலத்திற் செல்வம், புகழ் முதலியவற்றை மேலும் மேலும்பெற விரும்புகின்றவர்களுக்குச் செஞ்சிப் பட்டணம் இன்றியமையாதிருந்தது.

நிலமகள் முகமோ, திலகமோ, கண்ணோ,
நிறைநெடு மங்கல நாணோ,
இலகுபூண் மார்பின் ஆரமோ, வுயிரின்
இருக்கையோ, திருமகட் கினிய
மலர்கொலோ, மாயோன் மார்பின் நன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ, வானோர்
உலகின்மேல் உலகோ, ஊழியின் இறுதி
யுறையுளோ, யாதென வுரைப்பாம்.” கம்பர்.

நகரத்தின் காட்சியே காட்சி. அது நாகரிகமென்ற சித்திரத்தை நன்றாகத் தீட்டின பெரிய படம். பல நாட்டு மனிதர்களும் புகுந்திருந்து வாழப் பொருந்தின பேரிடம். பல வேறு முயற்சிகளாலும் பொருள் தேடுவதற்குப் போட்டி செய்கின்ற பந்தயச்சாலை. சிற்ப வேலைகள் சிறந்து விளங்குகின்ற சிங்காரபவனம். நாடு, நகரம், காடு, கடல், மலையென்ற ஐந்திடங்களிலும் விளையும் பொருள்களின் களஞ்சியம்.

பன்னிரண்டு திங்களிலும் நடக்கும் திருவிழாவமைந்த நறுமணப்பந்தல். குபேரன் வீட்டையுங்குறச்சிதம் செய்கின்ற நவமணித் திரள்கள் நிறைந்த நற்பொக்கிஷம். வைதிகம் லௌகிகமென்ற இருவகை யொழுக்கங்களும் எழில் குலையாமல் இயங்கும் சமவெளி. ஐவகைக் கருவியிலும் பிறந்து ஆநந்தம் விளைக்கின்ற சங்கீதமுரலும் தனிப்பெரு மண்டபம். பல துறைகளிலும் பயில்விக்கின்ற படிப்புப் பயிர் வளரும் பாங்கான விளைநிலம். பொருள் மதிப்புக்குத்தக இம்மையின் பங்கனை இவ்வளவுதானென்று நிறுத்துக் கொடுக்கும் திருத்தத் துலைக்கோல்.

செஞ்சிப்பட்டணத்துக்கு நடுவில் நான்கு சிறுமலைகளிருக்கின்றன. கோலகிரி, கிருஷ்ணகிரி, இராஜகிரி, இரத்தினகிரி யென்று அவற்றிற்குப் பெயர். கோலகிரி, பாந்தட்பள்ளியிற் கண் வளரும் பரந்தாமன் கோயிலைக் கொண்டது. கிருஷ்ணகிரி, சில அரசருக்குச் சிங்காசனமாகத் துலங்கியது. * இரத்தினகிரி, சிறைச்சாலையையும் ஆயுதசாலையையும் பொருந்தியது. இராஜகிரி, பொக்கிஷ சாலையையும் ஆலோசனை மண்டபத்தையும் பெற்றது. இராஜகிரியினடிவாரத்தில் அரசனரண்மனை விசித்திர வேலைப்பாட்டுடன் விளங்கும். அரண்மனையைச் சுற்றிலும் ஆயுதசாலை, படைப்பந்தி சிலம்பக்கூடம், களஞ்சியம், உக்கிராண முதலான சிறந்த கட்டடங்கள் வரிசை வரிசையாக விளங்கும். எண்ணிறந்த வருஷங்களாயினும் இப்பொழுதுதான் எழுப்பினவைபோல

---

* இதற்குச் சக்கிலிதுர்க்க மென்றும் பெயர். தூக்கிடல் முதலிய சிறைவேவல் செய்வார் முற்காலத்திற் சக்கிலியராகவே பெரும்பாலு மிருந்துவந்தமையின் அவர்களாலேயே அம்மலை பெயர் பெற்றுவிட்டது போலும்.

இடம்பியும் எழில் குலையாமல் உறுதியுள்ள மதில்கள் நான்கு மலைகளையும் சுற்றி நன்றாக அமைந்திருந்தன. அலங்கங்களில் பீரங்கி முதலிய பலமான ஆயுதங்கள் அடுக்கடுக்காக அமைக்கப்பட்டிருந்தன. அகழிகள் ஆழ்ந்தும் அகன்றும் நீர் நிறைந்து பகைஞர் புக முடியாவண்ணம் முதலைமுதலான கொடியவுயிர்களுக் குறைவிடமாகிப் பொலிந்தன. பகைஞர்கள் பலமான படைகளைக் கொண்டு பல வருஷங்கள் வரையில் தொடர்ந்து முற்றுகை செய்யினும் அங்குள்ளவர்களின் உணவு முதலியவற்றுக்கு ஒருநாளும் குறைவு நேரிடாது.

பட்டணத்தின் வடமேற்கிலிருந்து தென்கிழக்குவரையில் சங்கராபரணி யென்னும் சிற்ருெறென்று வலமாக வளைந்தும், நெளிந்தும் பெருகிச் செல்லுகின்றது. அதன் நீர்நிலைகளில் இளவாளை, வரால், கெண்டை முதலிய மீனினங்கள் சந்தோஷமாகத் துள்ளிவிளையாடும். தாமரை, அல்லி, நீலம் முதலிய நீர்ப்பூக்கள் நன்றாக மலர்ந்து நறுமணம் கமழும். கரையோரங்களில் அன்னம் நாரை முதலான நீர்ப்பறவைகள் அழகாக நடந்து ஆநந்தத்தைத் தரும். கரையின் இருமருங்கிலுமுள்ள சோலைகள் அரும்பு, மலர், காய், கனி முதலியவற்றை எப்போதும் கொடுத்துக்கொண்டிருக்கும். வண்டுகளின் இசைப்பாட்டு இளைப்பை நீக்கிக் களிப்பைக் கூட்டும். பலநிற மிலகுறும் பறவையினங்கள் இளங்கிளைகளிற்றங்கி என்றும் விகற்பிக்காமல் களிகூர்ந்து கூவும். பருத்தி, பட்டு முதலியவற்றைக் கொண்டு செய்யும் தொழிற்சாலைகளை அந்தப் பட்டணத்தில் எந்தப் புறத்திலும் காணலாம். வியாபாரம், கைத்தொழில், மருத்துவ முதலியவற்றைக் கற்பிக்கும் கல்விச்சாலைகளில் பல நாட்டுச் சிறுவர்களும் வந்து படித்து தேர்ந்து வருவார்கள். தேவாலயம், சமயமண்டம், பிரசங்கமேடை முதலானவைகள் தகுந்த விடங்களில்

அமைந்திருந்தன. சிறியவையும் பெரியவையுமானபல நியாய சபைகள் அவசியமான விடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருந்தன. அந்தணர் தவக்கோலும், அரசர் செங்கோலும்,வணிகர் துலைக் கோலும், வேளாளர் உழவுகோலும் ஒன்றையொன்று தழுவி வளர்ந்தன.

## அதிகாரம். 2

### அரசன்

*"மாநிலம்கா வலனாவான், மன்னுயிர் காக்குங்காலைத்*
*தானதனுக் கிடையூறு தன்னால், தன் பரிசனத்தால்,*
*ஊனமிகு பகைத்திறத்தால், கள்வரால், உயிர்தம்மால்,*
*ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ?"*

சேக்கிழார்நாயனார்.

இவ்வளவு பெருமை பொருந்திய செஞ்சிப் பட்டணம் * தரணிஸிங்கென்ற மன்னவனுக்குப் பிதிர்தனமாகக் கிடைத்திருந்தது. அவன் அக்கிரமங்களை யடக்கியும், அறங்களைப் பெருக்கியும் அரசுபுரிந்து வந்தான். அம்மன்னவன் அரிச்சந்திரன், இராமன் முதலிய சக்ரவர்த்திகளைப் போலத் தெய்வ சம்பந்தம் பெற்ற குலத்திற் பிறந்திராவிட்டாலும், தனது நாட்டைத் திறமையும் ஒழுங்குமாகச் செம்மையாய்ப் பரிபாலித்து வந்தான். விருந்தோம்பல், சுற்றம் தழுவல் முதலிய நல்லொழுக்கங்கள் அவன் அரசாட்சியை ஆலயமாக வடைந்தன. அனைவரும் தருமம் தவறாமலும், துக்கம் அறியாமலும் தழைத்திருந்தார்கள். பருவம் தவறாமல் மழை பொழிந்து வந்தது. விளைநிலங்கள் விசேஷமான வளத்தைக் கொழித்தன.

---

* இவனுக்குச் சிரோப்ஸிங்கு என்றும் பெயர்.

ஒருநாள் அந்த நல்லவரசன் நக்ஷத்திரங்களுக்கு நடுவில் விளங்கும் சந்திரன் போலக் கொலு மண்டபத்தில் அமர்ந்து அரச காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தான். மந்திரிகளும் தந்திரிகளும் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்யத் தொடங்கினார்கள். அரச பரிசாரகர்கள் ஆலவட்டம், மயில் விசிறி முதலியவற்றைக் கொண்டு அருகிலிருந்து உபசரித்துவந்தார்கள். கத்தி, ஈட்டி முதலான ஆயுதங்களைக் கரத்திற்றாங்கின காவல் வீரர்கள் பக்கங்களில் நின்றுகொண் டிருந்தார்கள். கொலு மண்டபத்தின் முகட்டில் உயரத் தூக்கின அழகிய கொடி அரசன் வெற்றிக்கு அறிகுறியாகக் காற்றில் அசைந்து மெதுவாக ஆடிக்கொண்டிருந்தது. அன்று சபையில் பரிசீலனைக்கு வரவேண்டிய விஷயங்களுக்குச் சம்பந்தப்பட்டவர் அரசன் அபிப்பிராயத்தையறிய ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அச்சமயத்தில் டில்லிப் பட்டணத்திலிருந்து இரண்டு குதிரைவீரர் வந்து அரசனை வணங்கி ஒரு திருமுகத்தைக் கொடுத்தார்கள். உடனே காரியஸ்தனொருவன் அதனைப் பெற்றுப் படிக்கத் தொடங்கினான்.

“நிலமா மகளின் நெற்றியில் நீட்டிய
திலகம் போலும் சிறப்பிற் றுய
டில்லியம் புரியில் வில்லிடு மயிலணை
யிருந்தர சியற்று மிறைவன் றிருமுகம்,
நீர்வளம் மல்கலின் நீள்புலம் யாவும்
கார்நிறம் பொருவும் கவின்செய் வண்டோட்டுப்
பைங்கூழ் கலித்துப் பசுங்கதிர் முற்றிச்
செந்நெல் மல்கும் செஞ்சியம் புரியுறை
தரணிஸிங் கென்னும் தரணிபன் அறிக:
எம்பாற் பொன்போ லிலக்கண மமைந்த
கொய்யுளைக் கடுநடைக் குதிரையொன் றுள்ளதால்,

அரசர் பலரையு மழைத்துப் பந்தயம்
அமைப்பான் கருத்தி-னவாக்கொண் டுள்ளேம்,
ஆதலின் வருதியால், ஜய—
மாதரை மீதினில் வளர்கநின் றூளே."

இங்ஙனம்,

ஷா ஆலம் பஹதுஷா.

தரணிஸிங்கு மன்னவன் அவர்களுக்கு வெகுமதி புரிந்து அன்று கவனிக்க வேண்டிய பிறவற்றையும் கவனித்துக் கொலுக்கலைந்து சென்றான்.

அவன் பட்டமகிஷிக்கு ரமாபாய் என்று பெயர். அவள் நல்ல உயர்தரக் கட்டழகி. பெண்களுக் கிருக்கவேண்டிய உத்தம வொழுக்கங்கள் ஒருங்கே யமையப் பெற்றவள். அந்தத் தம்பதிகள் அரங்கநாதப் பெருமானை யாராதித்து வந்த தன் பயனாக, ரமாபாய் அப்போது பூரண கருப்ப மடைந்திருந்தாள். சதுரர்கள் சமயம் சரியில்லை யென்று தம்மினும் வலியவரசன் கட்டளையை அநாதரவு செய்யார்களன்றோ! டில்லிக்குச் செல்லின் பெருமையும், சொல்லாதிருப்பின் சிறுமையும் அவனுக்குண்டாகுமல்லவா? அம்மன்னவன் அரசகாரியங்களைக் கவனிப்பதற்குத் தகுந்த வமைச்சர்களைத் தெரிந்து நியமித்தான். பயணத்துக்கு வேண்டிய உபகரணங்கள் பலவற்றையும் சித்தம் செய்து கொண்டான். அப்புறம் சில மெய்க்காவலரும் படைவீரரும் தன்னைப் பின்தொடர்ந்துவர ஐந்தாறு தினங்களில் டில்லிப் பட்டணத்துக்குப் பயணமாய்ச் சென்றான்.



# அதிகாரம் 3

## குதிரைப்பந்தயம்

"நாடென்ப நாடா வளத்தன ; நாடல்ல
நாட வளந்தரும் நாடு." திருவள்ளுவர்.

குருநாட்டின் தலைநகர் அத்தினபுரம். சந்திரவம்ச சக்ரவர்த்திகளுக்கு அது புராதன பட்டணம். திருதராஷ்டிர மன்னவர் தமது சகோதர புத்திரர்களான பாண்டவர்களுக்கு அர்த்தராஜ்ய மகுடாபிஷேகம் செய்து இராஜதானியாகக் கொள்ளும்படி கொடுத்தது காண்டவப்பிரஸ்தமென்ற பழம் பட்டணம். தருமபுத்திரர் இந்திரன் உதவியினால் அந்தப் பட்டணத்தைப் புதுப்பித்து இந்திரப்பிரஸ்தமென்று பெயரிட்டு அதிலிருந்து அரசுபுரிந்து வந்தார். அவர் காலத்தில் இந்திரப்பிரஸ்தம் ஜகதிலமாகப் பிரகாசித்தது. அவருக்குப் பின்னர் அநேக வரசர்கள் அந்தப் பட்டணத்தில் இருந்து அரசு புரிந்தார்கள். அப்புறம் அந்தப் பெரும் பட்டணம் மொகலாய வரசர்களுக்குச் சுவாதீனமாகி டில்லியென்று மறுபெயர் பெற்றது. மொகலாய சக்கரவர்த்திகளில் ஷாஜிஹானென்பவர் பொருளைக் கணக்கின்றிச் செலவிட்டு அந்தப் பட்டணத்தில் மயிலின் வடிவமான ஓரழகிய வாசனத்தை யமைத்தார். அவருக்குப் பின்வந்தவர்கள் அம்மயிலாசனத்திற் றங்கியிருந்து உலகத்தை யாண்டு வந்தார்கள். ஔரங்கஜீப்பின் புத்திரனாகிய ஷாஆலம் காலத்தில் இந்தியா பலசிறு பிரிவுகளாகப் பிரிந்து போயிற்று. பலவிடங்களில் உள்நாட்டுச் சண்டைகள் உக்கிரமாகக் கிளம்பியும், அடங்கியும், ஜனங்களை உபத்திரவித்து வந்தாலும், பெயருக்கு மாத்திரம் டில்லியினரசர்தாம் தலைமை பெற்றிருந்தார். ஷா ஆலத்தின் தர்ப்பார் ஆடம்பரமா யிருக்கும்.

ஒருநாள் டில்லியில் தர்ப்பார் மண்டபம் செம்மையாகச் சிங்காரிக்கப்பட்டிருந்தது. *ஷா இன்ஷா தன்னை அலங்கரித்துக்கொண்டு சபையில் வீற்றிருந்தார். அவர் எல்லா வரசர்களுக்கும் அழைப்புக் கடிதங்கள் அனுப்பியிருந்தபடியினால் அவர்கள் யாவரும் சபையில் வந்து திரண்டிருந்தார்கள். அவர்களிற் பலர், தம்மை ஆண்மை, ஐசுவரியம், அந்தஸ்துமுதலியவற்றில் நிகரற்றவரென்று பிறர் மதிக்கச்செய்து கொள்வதில் சதுரராக விளங்கினர். அவர்கள் பெரும்பாலும் தங்களை அங்குள்ளவர்கள் காணச் சென்றார்களே யன்றிச் சபையிலுள்ளவர்களைத் தாங்கள் காணச் செல்லவேயில்லை. அவர்கள் ஆடம்பரம் நகை வியாபாரிகள், ஜவுளி வர்த்தகர், அத்தர் கடைக்காரர் முதலிய சிலருக்கு அதிருஷ்டத்தை யுண்டுபண்ணிற்று. எல்லா வரசரும் பஹதுஷா என்ன சொல்லப் போகிறாரோவென்று அவர் முகத்தை ஆவலுடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அப்போது ஷாஆலம் எழுந்து நின்று "அடக்கமும் அன்பும் பொருந்திய வரசர்களே! நீங்கள் யாவரும் நெடுந்தூரத்திலிருந்துவந்து எம்மைக் கவுரவப்படுத்தி யிருக்கிறீர்கள்; டில்லிப் பட்டணத்தில் சிலநாள் வரையில் அனைவரும் ஒருமிக்க விருந்து சந்தோஷமாகப் பொழுது போக்கவேண்டும்; இதுதான் உங்களை வருவித்ததன் நோக்கம்; இன்று முதல் தர்ப்பாரில் நடக்கும் ஆடல் பாடல் முதலிய வேடிக்கைகளில் நமது காலம் அலுப்பின்றிக் கழிந்து செல்லட்டும்; விதம் விதமான சாமர்த்தியங்களைக் காட்டி மனத்திற்கு இன்பம் விளைக்கவல்ல நிபுணர்கள் பல தேசங்களி லிருந்து அழைக்கப்பட்டிருக்கிறார்கள்; அவர்களை யன்றிக் குதிரைப்

---

* ஷாஇன்ஷா – இராஜாதிராஜன்.

பந்தயத்தில் தமது சாமர்த்தியத்தைக் காட்டும் சதுரரும் தக்கபடி சன்மானிக்கப்படுவர்; விநோதங்களின் விவரம் விளம்பரத்தில் விளங்கும்; ஒவ்வொருவரும் தமது திறமையை இங்குள்வர்களுக்குக் காட்டிக் களிப்பூட்டும் வண்ணம் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்" என்று சொல்லி ஆசனத்திலமர்ந்தார்.

இயற்கையில் விநோதப் பிரியர்களான அவ்வரசர்கள் பஹதுஷாவின் வசனத்தில் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். உடனே ஒரு காரியஸ்தன் வந்து அனைவருக்கும் விளம்பரங்களை வழங்கினன். அவற்றில், அன்றுமுதல் நடக்கும் விளையாட்டுக்களுக்கு விவரமிருந்தது. பின்னர்க் கலைஞானங்களில் வல்ல நிபுணர்கள் ஒருவர்பின் னொருவராகத் தோன்றித் தமது சாமர்த்தியங்களைக் காட்டி மகிழ்வூட்டத் தொடங்கினார்கள். அவ்வரசர்களுக்கு இவ்விதமான காலக்ஷேபங்களில் ஆறுநாள் ஆறு நிமிஷம்போலக் கழிந்து போயின. கடைசி நாளிற்றான் குதிரைப் பந்தயம் குறித்திருந்தது. அன்று பந்தயச் சாலையில் அமைத்திருந்த வாசனங்களில் அரசர்கள் யாவரும் வந்து வரிசையாக அமர்ந்திருந்தார்கள். அந்தப் பரந்த மைதானத்தில் முதலிற் பல விளையாட்டுக்கள் நடந்து அனைவருக்கும் ஆநந்தத்தை உண்டுபண்ணின. அப்புறம் அங்குக் குதிரை யொன்று கொணர்ந்து நிறுத்தப்பட்டது.

"திணிதரு கழுத்தினிற் சிறந்த தெய்வத
மணியுள தாகி, யெண் மங்க லத்ததாய்,
அணிதரு பஞ்சகல் யாண முள்ளதாய்க்
குணிதரும் நீரது குதிரை யாவதே."
"நாலுகால் களும் கடைந் தெடுத்து நாட்டினாற்
போல்வதாய்க், கொட்புறும் போது சுற்றுதீக்
கோலையொப் பாகி, மேற் கொண்ட சேவகன்
காலினுள் அடங்குவ தாகும் கந்துகம்." பரஞ்சோதிமுனிவர்.

அதன் உடலமைப்பு அனைவருக்கும் ஆச்சரியத்தை யுண்டுபண்ணிற்று. அந்தப் பரிமா உலகத்தில் உள்ள எல்லாக் குதிரைகளிலுமுயர்ந்தது. உத்தம லக்ஷணங்களிற் சிறந்தது. அதன் குளம்புகள் நீலமணியிற் செய்த பந்துபோல நிகு நிகுவென்று விளங்கின. கால்கள், கடைசற் பிடித்து நிறுத்தினதுபோலக் காணப்பட்டன. உடல் நீண்டு அளவும் பலமுமாகப் பருத்து அழகு குடிகொண் டிருந்தது. குலப் பெண்போன்ற கவிழ்ந்த முகமும், கருப்பல்லி மலர்போன்ற மருண்ட கண்களும், மேல்நோக்கி நெரித்து நின்ற காதுகளும் குழிந் தகன்ற நாசித் துவாரங்களும், நெருப்புத் துண்டம் போன்ற நாக்கும் அதன் நற்பிறப்பை நன்ருக விளக்கின. அதன் வால் கூந்தற் பனையின் கொழுங்குலைபோல மயி ரடர்ந்து வளர்ந்து தொங்கிற்று. பிடரிமயிர் ஒருபுறமாகக் கழுத்திற் சரிந்து புரண்டது. அந்தக் குதிரை * பஞ்ச கல்யாணி யென்னும் ஜாதியாகும். அவ்வுயர்ந்த குதிரையின் நெற்றியில் 'இதனை நடத்துகின்றவர் பதினறு பாரம் தங்கத்தை வெகுமதி பெறுவர். தவறுகின்றவர் பதினறு வருஷம் வரையில் பெருஞ் சிறையில் வதிவர்' என்று எழுதியுள்ள பொற்பட்ட மொன்று பிரகாசித்துக் கொண்டிருந்தது.

அரசர்கள் யாவரும் குதிரையி னழகைக் காணச் சென்ருர்கள். அப்பொழுது அப்பொற்புரவி தற்செயலாகக் கனைத்தது. அவ்வொலி இடியோசையினும் அதிகமாக வெழும்பி அச்சத்தை யுண்டுபண்ணின படியினால், அவர்கள் யாவரும் இதயம் கலங்கி நடுங்கி நின்ருர்கள். அப்புறம் அவர்களுக்கு அதனை நடத்தவேண்டு மென்கிற வெண்ணம் உன்

* நான்கு கால்களும் உச்சியும் வெண்ணிறமுள்ளது பஞ்சகல்யாணி.

டாகவேயில்லை. அவர்கள் ஒருவர்பின் னொருவராகத் திரும்பி வந்து தங்கள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்து விட்டார்கள். ஷா ஆலம் அவர்கள் செயலைக்கண்டு "அரசர்களே! இந்திரன் புரவிபோன்ற இந்தக் குதிரையை நடத்துவதற்கு உங்களில் ஒருவரு மில்லாதுபோனது விசனிக்கத் தக்கது" என்று ஏளனமாகச் சொன்னார். அவ்வசனம் தரணிஸிங்கு மன்னவன் செவியில் பழுக்கக் காய்ச்சின இருப்புச் சலாகைபோல நுழைந்தபடியினால் அவன் எழுந்து நின்று "அண்ணலே! இத்தனை பெயரும் காண நான் இப்பொழுதே சென்று குதிரையை நடத்தி வருகிறேன்" என்று சொல்லிக் கம்பீரமாக நடந்து குதிரையை யணுகி அதன் கலினக் கயிற்றைப் பற்றி யேறத்தொடங்கினான். அவ்வளவுதான் ஸமதம்! அந்த முரட்டுக்குதிரை அவனுக்குமேல் ஆகாயத்திற் கிளம்பி அவனை உதைத்துக் கீழே தள்ளிவிட்டது. அதனைக் கண்டு அங்கிருந்தவர்கள் கைக்கொட்டிச் சிரிக்கத் தொடங்கினார்கள். தரணிஸிங்கு மன்னவன் அவமானத்தாலும், காயத்தாலும் உடம்பு குன்றி, ஒன்றும் தோன்றாமல் நிலத்தை நோக்கிக்கொண்டு நின்றான். அப்பொழுது பஹதுஷா "அரசர்களே! பகல் உச்சிக்கு வந்துவிட்டது; நியாயப்படி தரணிஸிங்கு மன்னவர் இன்று முதற் பதினாறு வருஷம் வரையில் டில்லிச் சபையில் இருந்துகொண்டு எமக்கு உறுதியான காரியங்களை உவந்து செய்து வரவேண்டும். அனைவரும் சாப்பாட்டுக்குச் செல்லுங்கள்!" என்று பரிவாரங்களுடன் அரண்மனையை யடைந்தார். அரசர்கள் அன்று முழுவதும் அந்தப் பட்டணத்திலிருந்து மறுநாள் புறப்பட்டுத் தங்கள் தங்கள் நகரம் போய்ச் சேர்ந்தார்கள். தரணிஸிங்குமன்னவனும் அவனுடன் வந்தவர்களும் மாத்திரம் விதியைநொந்து கொண்டு டில்லிப் பட்டணத்தில் இருந்துவரலானார்கள்.



## அதிகாரம் 4

### புத்திரப்பேறு

"படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வராயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்,
மயக்குறும் மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைதாம் வாழும் நாளே."                புறநானூறு.

குடும்ப விருக்ஷத்துக்குக் குழந்தை கொழுங்கனி. கோடித் துன்பங்களாயினும் குழந்தையைக் கண்டதும் குறைந்து போகின்றன. ஏனென்றால், குழந்தை பொறாமை, வஞ்சனை முதலிய பெருங்காற்றில் வருந்துவதில்லை. அதன் முகமும் மனமும் களங்க மற்றவை. அது பொய் யொழுக்கங்களாற் றன்னியற்கையை மறைக்க முயலுவதில்லை. தவழ் நடை நடந்தும், மழலைச்சொல் மொழிந்தும், மனம் குழையச் சிரித்தும் ஆநந்த மூட்டுகின்றது. இல்வாழ்பவனுக்கு இம்மைச் செல்வங்களில் மக்கட்பேறு முதன்மையானது. அஃதுள்ளவன் இம்மை மறுமை இரண்டிடத்திலும் இன்பமடைகிறான். ஏழை முதல் இறைவன் வரையிலும் மக்களின்பம் மாறுபடுவ தில்லை. அவ்வின்பம் அனைவருக்கும் ஒரு தன்மையாகவே அமைந்திருக்கின்றது. 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு' குபேரன் அரண்மனை போலச் செல்வத்திற் குறைவற் றிருந்தாலும் குழந்தையில்லாத வீடு கொச்சையானது. எல்லாச் சாஸ்திரங்களும் குழந்தையைக்கொண் டாடுகின்றன. நாற்புறமும் விழுதுகள் வளர்ந்து வேரூன்றி

முதல்மரத்தைத் தாங்குவது போலத் தளர் பருவத்தில் தாய் தந்தைகளைத் தநயர் தாங்கி நிற்கின்றனர்.

செஞ்சிப் பட்டணத்தின் அரசாட்சி செம்மையாக நடந்து வந்தது. நகரத்தில் அரசனில்லாத குறைவு அணுவும் புலப்படவில்லை. அறிவிற் சிறந்த வமைச்சர்கள் ஆகவேண்டிய காரியங்களை அவ்வப்பொழுது அறிந்து நிறைவேற்றி வந்தார்கள். பட்ட மகிஷியின் கருப்பம் படிப்படியாக வளர்ந்து பிரஸவ காலத்தைச் சமீபித்தது. அறிவுள்ள பெண்கள் கருப்ப காலத்தில் பயம், வருத்தம் முதலியவற்றை மனத்திற் கொள்ள மாட்டார்கள். ஏனென்றால், ஒரு பெண் தான் கருத்தரிக்கும் காலையில் நினைக்கும் வடிவமே அவள் வயிற்றிற் பிறக்கும் சிசுவுக் கமைகின்றது. கருப்பச் சிசுக்கள் தாயின் சந்தோஷத்தையும் சமாதானத்தையுமே தங்கள் வளர்ச்சிக்கு வரிச்சட்டம் போலக் கொண்டிருக்கின்றன. அவ்விஷயம் ரமாபாய்க்கு நன்றாகத் தெரியும். காரண மிருந்துங்கூட அவள் துன்பக் காட்டில் திரிந்துழலவில்லை. சந்தோஷமும் சமாதானமுமுள்ளதாகவே மனத்தைச் செய்துகொண் டிருந்தாள். பின்னர் அயிராணி அநேகம் நாள் தவம் கிடந்து ஜயந்தனைப் பெற்றதுபோல அவள் ஒரு நாள் உத்தம முகூர்த்மொன்றில் உயர்ந்த புத்திரனைப் பெற்றாள். அரண்மனைப் பெண்கள் அந்தச் செய்தியை அமைச்சர்களுக்கு அறிவித்தலும், அவர்கள் யானையின் மீது பேரிகை யமைத்து இளவரசன் ஜநனத்தை எல்லாருக்கும் தெரியப்படுத்தினார்கள்.

நகர வாசிகள் அதனைக் கேட்டமாத்திரத்தில் தங்கள் வயிற்றில்தான் தநயன் பிறந்ததுபோலப் பெருமகிழ்ச்சி யடைந்து, விருந்துகளாலும், வேடிக்கைகளாலும் திருநாள் கொண்டாடித் தங்கள் சந்தோஷத்தையும் இராஜ பக்தியையும் எடுத்துக் காட்டினார்கள். அமைச்சர்கள் அரசன்

பெயரால் அந்தணர்களுக்கு அளவற்ற தானம் பண்ணினார்கள். குடிகளுக்குச் சில வரிகளைக் குறைத்துக் கொடுத்தார்கள். குற்றவாளிகளிற் சிலருக்குச் சிறைவீடு செய்தார்கள். தேவாலயங்களுக்குத் திருவிழா நடத்தினார்கள். அறுசுவை யுண்டி அனைவருக்கும் படைத்தார்கள். கற்கண்டும் கனிகளும் கலந்து வழங்கினார்கள். இங்ஙனம் பன்னிரண்டு நாட்கள் வரையில் அந்தப் பட்டணத்தில் அனைவரும் சந்தோஷக் கடலில் திளைத்திருந்தார்கள். பிறந்த குழந்தைக்குச் செய்யவேண்டிய வைதிக லௌகிகச் சடங்குகள் விதரணையாக நடந்தேறின. ஜோதிடம் வல்லவர் அரசிளங் குமாரனுக்கு ஜாதகம் கணித்துச் சன்மானம் பெற்றுச் சென்றனர். ஜயஸிங்கு என்று பிறந்த குழந்தைக்குப் பெயரிடப் பட்டது. அமைச்சர்கள் புத்திர ஜநனச் செய்தியைத் தரணிஸிங்கு மன்னவனுக்குத் திருமுகம் வரைந்து தூதர் முகமாகத் தெரியப்படுத்தினார்கள்.

## அதிகாரம் 5

### தந்தையறிவு

"வளம்பெற வேண்டாதார் யார்?யாரும் இல்லை;
அளந்தன போகம் அவரவர் ஆற்றல்;
விளங்காய் திரட்டினார் இல்லை; களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்."
சமணமுனிவர்

உலகத்தில் ஒவ்வொருவரும் தத்தம் எண்ணங்களை நினைத்தபடி நிறைவேற்றிக்கொள்ள முடியாது. கோடியில் ஒருவருக்குக்கூட அவ்வரிய வரம் கிடைப்பதில்லை. உலகம்

ஒரு பெரிய பரிசோதனைச் சாலை. அத்தியாவசியமான உடைகளும் அன்னபானாதிகளுமே அநேகம் பெயருக்கு அகப்படுவது கிடையாது. கிடைக்கும் கிடைக்குமென்ற நம்பிக்கையைத் துணை கொண்டுதான் உலகத்தில் உயிர் தரித்திருக்கவேண்டும். இடைவிடாமற் சுழலும் அதிருஷ்ட சக்கரம் ஒருவனை என்றும் ஒரே நிலைமையில் வைத்திருப்பதில்லை. துக்கியைச் சுகியும், சுகியைத் துக்கியும், ஏழையைத் தனிகனும், தனிகனை ஏழையுமாக மாற்றுவது அதன் இலக்கணம். அநுபவிப்போம் என்ற நிச்சயமில்லாமலேயே நாம் உலகத்தில் உழைத்துவர வேண்டும். ஏனென்றால், உழைப்பும் பலனும் ஒன்றன்று; அவை என்றும் வேறு வேறு.

தரணிஸிங்குமன்னவன் எண்ணியது ஒன்று. நடந்தது வேறொன்று. அவன் நிலைமை மிகவும் கஷ்டம். எல்லா வரசரையும்போல அவனும் வாயை மூடிக்கொண் டிருந்தால் சிறை வாசத்துக் கிடமில்லை. என்ன செய்யலாம்! அவன் விருப்பம் புகழ். ஆனால், அந்தப் புகழ் அவ்வளவு எளிதிற் கிடைக்கத் தக்கதன்று; ஊழ்வினை அதனைக் கீழே தள்ளிவிட்டது. ஒன்றா இரண்டா? பதினாறு பெரிய வருஷம்! அம்மம்ம! எவரால் கடக்கமுடியும்? மனம் இடிந்து உடலும் ஒடுங்கிப் போகாதா? பிறரையடக்கி அதிகாரம் செலுத்துகின்றவர் பிறருக்கு அடங்கி நடப்பது அசாத்தியமானகாரியம்.

தரணிஸிங்கு மன்னவன் அந்தப் பட்டணத்தில் சில குறிப்பிட்ட விடங்களுக்குத்தான் சுயேச்சையாகச் செல்லலாம். மற்ற விடங்களுக்கு ஷா இன் ஷாவின் அநுமதி பெறவேண்டும். அதனை நினைக்கும் பொழுது அனுப்பு அதிகாரிக்கும். செய் தொழில்களைக் கவனித்தும், தெரிந்த

வர்களோடு பழகியும் அவனுக்குப் பகலும் முன்னிரவும் கழியும். நித்திரைக்கென்று நிச்சயிக்கப்பட்ட விராக்காலம் எப்படிக் கழியும்? உலகமும் உலகப் பொருள்களும் அதற்குத் துணை செய்யா. நெற்றித்தண்ணீர் நிலத்தில் விழும் வண்ணம் நன்றாக வுழைத்தவருக்கும், மனக்கவலைக்கு மிதமிஞ்சி யிடங்கொடாதவருக்குந்தாம் இரவில் இன்பமயமான நித்திரை வரும். விதம் விதமான படுக்கையிற் படுத்தாலும் விசாரமுள்ளவனுக்குத் தூக்கம் வராது. அவன் தலையணைகளை மாற்றியும், வலமும் இடமும் புரண்டும், 'உஸ்! உஸ்!' என்று பெருமூச்சு விட்டுந்தான் இரவைத் தொலைக்கவேண்டும்.

அம்மன்னவன் சில நேரம் மனைவியின் பிரஸவ காலத்தில் தான் அருகிலிராததற்கு வருந்துவான். சில நேரம் அத்தனை யரசர்களுக்கும் முன்னர்த் தனக்குக் கிடைத்த அவமானத்துக்குச் சிந்திப்பான். சில சமயங்களில் வெளியில் வந்து வானத்தைப் பார்த்து விசனிப்பான். என்ன செய்யலாம்? அவன் உடல் மாத்திரம் படுக்கையிற் புரண்டு வருந்த, எண்ணங்கள் யாவும் இறகு முளைத்து எங்கெங்கேயோ பறந்துகொண்டிருக்கும்.

இரவும் பகலும் நம்மை உத்தரவு கேட்டுக்கொண்டு உலகத்தில் நடப்பதில்லை. அவ்விரண்டும் விருப்பு வெறுப்பில்லாமல் தம் தொழிலைத் தாமே செய்து வருகின்றன. நிமிஷம் கூடுவதும் இல்லை. அப்படியே ஒரு நிமிஷம் குறைவதும் இல்லை. உலகத்தை இன்பத் தோட்டமாக்குவதற்கும், அன்றித் துன்பம் நிறைந்த சுடுகாடு செய்வதற்கும் மனமே முதன்மையானது. மனத்தெளிவுக்குத் தக்கபடி உலகம் வெளிப்பட்டு மறையும்.

"அறவி னைக்கும், அரும்பொருள் இன்பொடு
பெறுவ தற்கும், பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்கும் நல் வீரந்த னக்கும், ஒண்
துறவி னுக்கும், துணைமனம் என்பவே." சிவப்பிரகாசர்.

ஒருநாள் தரணிஸிங்கு மன்னவன் அதிகாலையிலெழுந்து தெய்வம் தொழுது தினக் கடன்களை முடித்துக்கொண்டிருக்கையில் செஞ்சித் தூதர்கள் வந்து தண்டனிட்டுத் திருமுகத்தைக் கொடுத்தார்கள். அவன் பிரித்துப்படித்துப் புத்திர ஜனனத்துக்கு மனம் பூரித்தான். பிற்பாடு, அந்தணர்களுக்குத் தான தருமங்களைச் செய்தான். இரண்டொரு நாள் கழித்துச் செங்கோலையும் செல்வனையும் செம்மையாகக் கவனித்து வளர்த்துவரும்படி திருமுக மெழுதித் தூதர்களிடம் கொடுத்தனுப்பினான்.

## அதிகாரம் 6

### மகன்செலவு

"மார்பினு மகன்ற கல்வி, வனப்பினு முயர்ந்த சீர்த்தி,
போர்வரு தெரியல் மாலைப் புயத்தினு முயர்ந்த கொற்றம்,
சீர்தரு வாய்மை மிக்க கண்ணினும், செங்கை வண்மை
பார்வளஞ் சுரக்கும் செல்வப் பரப்பினும் பரந்த வன்றே."
வில்லிபுத்தூரார்.

குழந்தையின் வளர்ச்சியும் பிறையின் வளர்ச்சியும் ஒன்று. பிறையின் வளர்ச்சியில் ஒளியும் தண்மையும் உயர்ந்து பெருகும். குழந்தையின் வளர்ச்சியில் அறிவும் சுறுசுறுப்பும் அதிகரித்து விளங்கும். தவழ்தல், நடத்தல், பேசல், பழகல், பொருள்களை வினவித் தெரிந்து கொள்ளல் முதலிய ஒவ்வொன்றையும் குழந்தை படிப்படியாகக் கற்றுக் கொள்

கின்றது. கடவுள் அதற்கு அங்ஙனம் அறிவை வளரச் செய்கிறார்.

ஜயஸிங்குக்குப் பிராயம் வளரவளர அறிவும் வளரத் தொடங்கிற்று. அவன் நல்ல முகூர்த்தத்தில் பள்ளியில் வைக்கப்பட்டான். கருப்பூர விளக்குப் போன்ற அவனறிவைக் கண்டு ஆசிரியரும் அச்சமடைந்தார்கள். அவன் கற்கவேண்டிய வனைத்தையும் தனது பன்னிரண்டாம் பிராயத்துக்குள் குறைவும் சந்தேகமு மின்றிக் கற்று அப்புறம் அரசர்களுக்கு அவசியமான யானையேற்றம், குதிரையேற்றம், படைப்பயிற்சி முதலான அருங்கலைகளிற் பயிலத் தொடங்கினான். ஊக்கமும் உறுதியு முள்ளவனுக்கு எல்லாக்கலைகளும் எளிதிற் சித்தியாகு மல்லவா? அரசகுமாரன் சிலம்பம் மற்போர் முதலியவற்றைப் பயில்கையில் மகம்மது கான் என்ற துருக்கச் சிறுவனொருவன் அவனுக்குக் கற்றறி பாங்கனாயினான். வயது, அறிவு, விடாப்பிடி முதலியவற்றில் அவன் ஜயஸிங்குக்கு எவ்விதத்திலும் குறைந்தவனல்லன். அரச குமாரனுக்கு அவனைப் பிரிந்திருக்கும் அற்ப நிமிஷமும் அரிய யுகமாகவிருக்கும். ஜயஸிங்கு அவனுடன் கூடி அணிமையிலுள்ள வனத்தில் நுழைந்து கரடி, புலி முதலிய துஷ்ட விலங்குகளைக் கொன்றும், அவற்றைப் பந்துபோல உயரத் தூக்கியெறிந்தும் விளையாடுவான். அவன் தனது விளையாட்டுப் பருவத்திலேயே ஸாகஸம், பலம், தைரியம், கருணை, கொடை முதலான அற்புத குணங்களை அருங் கலனாகக் கொண்டுவிட்டான். செஞ்சிப் பட்டணத்தில் அவன் மற்போர் பழகிய சிலம்பக் கூடத்தை இன்னமும் நன்றாய்க் காணலாம். அவன் நாள்தோறும் உயர்ந்த குதிரையிலேறி உலாவிவருகையில் அந்தப் பட்டணத்திலுள்ளவர்கள் தொடங்கிய தொழில்களை அவ்வவ்வண்ணமே கிடக்க

விட்டு மாடங்களிலும், மேடைகளிலும், வாயில்களிலும், வீதிகளிலும் வந்துநின்று அவனை இமைகொட்டாமற்கண்டு மகிழ்வார்கள். ஜயஸிங்கு இரும்பைக் காந்தம் இழுப்பதுபோலச் செஞ்சியிலுள்ளவர் மனங்களைத் தனது உயர்ந்த குணங்களினால் ஒருமிக்கக் கவர்ந்து கொண்டு விட்டான்.

"ஈண்டுநீர் வையததுள் எல்லாரும் எத்துணையும்
வேண்டார்மன் தீய; விழைபயன் நல்லவை;
வேண்டினும், வேண்டா விடினும், உறற்பால
தீண்டா விடுதே லரிது."
சமணமுனிவர்.

அவனுக்கு மெல்ல மெல்லப் பதினாறுவது பிராயம் பிறந்தது. அவன் ஒருநாள் தனது நற்றாயின் அரண்மனைக்குச் சென்றான். வழக்கம்போ லிருக்குமிடத்தில் அவன் தாயைக் காணவில்லை. அவள் அரண்மனையின் ஒதுக்கறை யொன்றில் இருப்பதாகவறிந்து அவ்விடத்துக்குப் போனான். அது மிகவும் சாதாரணமான ஒரு பழைய அறை. ரமாபாய் அவ்வறையின் ஒரு மூலையிலிருந்த ஆசனத்திலுட்கார்ந்து என்னவோ யோசித்துக் கொண்டிருந்தாள். அவள் விழித்திருந்தபோதிலும் அவ்விழி பார்வையைப் பெறவில்லை. கருப்பல்லியைக் காட்டிலும் கரிய, அவள் அழகிய கண்கள் செவ்வல்லியினுஞ் சிவந்து விளங்கின. ஊற்றின் முகத்துவாரத்தில் அரித்துவரும் நீரொழுக்கைப்போல அக்கண்கள் சூடுள்ள வெந்நீரைச் சிறுக சிறுகச் சொரிந்து கொண்டிருந்தன. அரசகுமாரன் தனது தாய் அப்படிப் பட்ட நிலைமையிலிருக்கும் பொழுது கண்டதேயில்லை. அவன் யாருக்கு என்ன நேர்ந்ததோவென்று பயந்து ஒன்றும் தோன்றாமற் றியங்கினான். நான் உத்தரவு பெறாமல் உள்ளே நுழைந்தது பெரும்பிழையாகுமென்று வருந்தினான். அவனுக்கு வெளியிற் செல்லவாவது, அன்றித் துக்கத்துக்குக் காரணம் கேட்கவாவது

தோன்றவில்லை. சித்திரப்பதுமை போல நின்றவிடத்தில் அப்படியே அசைவற்று நின்றுவிட்டான்.

தாய் திரும்பிப் பார்க்கும்பொழுது எதிரில் புத்திரனைக் கண்டாள். அவள் அப்பொழுதடைந்த வருத்தத்தைச் சொல்லத் தரமன்று. நெருப்பு மிதித்தவர் போலத் துடித்து வருந்தினள். உடனே கண்ணீரைத் துடைத்து முகத்தை மாற்றிக்கொண்டு 'குழந்தாய்! இங்கே வந்து எத்தனை நாழிகை யாயிற்று?' என்று கேட்டாள். அரச குமாரன் 'அம்மா! இப்பொழுதுதான் வந்தேன்; உத்தரவில்லாமல் உள்ளே நுழைந்த குற்றத்தை மன்னிக்கவேண்டும்' என்று அடியில் விழுந்து வணங்கினன்.

ரமாபாய் மகனை முத்தமிட்டுக் "குலக்கொழுந்தே! தாய் மகனையும், மகன் தாயையும் பார்த்துக்கொள்வதற்கு உத்தரவு வேண்டியதில்லை; அவ்விதி வேற்று மனிதர்களுக்கு மாத்திரம் வேண்டப்படுவதாகும்; சுக துக்கங்களில் வேறுபடாதவர் வித்தியாசம் வகுப்பது குற்றமல்லவா." என்று சொன்னள். ஜயஸிங்கு "அம்மா! தங்கள் வசனத்தை உண்மையாக்க வேண்டும்; தங்கள் துன்பம் என்மனத்தை யறுக்கின்றது; அதன் காரணத்தை அறிவியுங்கள்; முடிந்தால், தீர்க்கிறேன்; இல்லையேல், நானும் இருந்து வருந்துகிறேன்; நான் அறியாதிருப்பது இரண்டிடத்துக்கும் நல்லதன்று" என்று கெஞ்சினன்.

ரமாபாய் "செல்வக் குழந்தையே! உனக்கு அறிவிக்க முடியாத இரகசியம் ஒன்றுமில்லை; இளஞ்சிறுவர்க்கு இப்படிப்பட்ட விஷயம் ஏக்கத்தை யுண்டு பண்ணும்; என்றும் இரகசியமாயிருப்பது ஒன்றுமேயில்லை. எப்படிப்பட்ட இரகசியங்களும் ஒரு காலத்தில் வெளியாக வேண்டியதுதான்;

என் வருத்தத்துக்குக் காரணம் வெளிப்படை; நீ எனது வருத்தமணத்தைத் தற்செயலாகச் சிறிதுசுவைத்துவிட்டனை; இனியுனக்கு அறிவியாதிருக்கவிதியில்லை; மனக்கவலைக்கு விசனமென்றுபெயர்; அஃது ஊழ்வினையின் அதீனப்பட்டு உயிர்களை வருத்திவருகின்றது; உயர்குடிப் பிறப்பையாவது, ஒழுக்கத்தின் சிறப்பையாவது, ஒப்பற்ற கல்வியையாவது, உலகாளும்திறத்தையாவது அது கவனிப்பது கிடையாது; அதற்கு ஏழைமுதல் இறைவன் வரையில் எல்லாரும் ஒன்றுதான்; அதன்முன்னர் எப்படிப்பட்ட பலமுள்ள காவலும் பயன் படாதொழியும்; புராணங்களிலும் இதிகாசங்களிலும் கூட விசனக்காற்று வீசாத சரித்திரம் இருப்பதில்லை;

"அன்புள்ள குழந்தையே! ஷா ஆலம் என்பவர் இப்பொழுது உலகத்துக்குச் சக்ரவர்த்தி; அவர் டில்லிப் பட்டணத்தில் இருந்துவருகிறார்; உன்னைக் கருப்பமாக விருக்கையில் அவர் உன் றந்தைக்கு ஓர் அழைப்புக்கடித மனுப்பினார்; பெரியவரசர் கட்டளையை அவமதிக்கலாகாதென்று எனது பூர்ண கருப்பத்தையும் பாராமல் உன்றந்தை அப்பொழுதே புறப்பட்டு டில்லிப் பட்டணம் போனார்; அடுத்த திங்களில் நீ பிறந்தனை; உனது ஜநனச் செய்தி அவருக் கறிவிக்கப்பட்டது; அவர் அதற்குப் பதிலனுப்பினார்;

"அதில் "அடக்கமும் அன்பும் பொருந்திய அமைச்சர்களே!..................எல்லா வரசர்களும் டில்லிப் பட்டணத்தில் வந்து திரண்டிருந்தார்கள். வாரம்வரையில் எங்கள் வாழ்க்கை வேடிக்கை விநோதங்களில் அலுப்பின்றிக் கழிந்தது. கடைசி தினத்தில்தான் எங்கள் இன்ப வாழ்க்கைக்கு இடையூ றுண்டாயிற்று. பஹதுஷாவினிடம் ஒரு தெய்வக் குதிரை யிருக்கிறது. அன்று பந்தயச் சாலையில் அதனைக்

கொணர்ந்து நிறுத்தி யிருந்தார்கள். அதன் நெற்றிப் பட்டத்தில் 'இப்பரிமாவை நடத்தினவன் பதினாறுபாரம் தங்கத்தைப் பெறுவான். தவறினவன் பதினாறு வருஷம் வரையில் பெருஞ் சிறையில் வதிவான்' என்று பொறித்திருந்தது. எல்லா வரசரும் குதிரையைக்கண்டதும் கும்பிட்டுத்திரும்பி விட்டார்கள். அவர்கள் செயலுக்குப் பஹுதுஷா பரிகாசம் பண்ணினர். அஃது பொறுக்க முடியவில்லை. நான் உடனே யெழுந்து குதிரையை நடத்தச் சென்றேன். அப் பரிமாவின்மீது எப்படியாவது ஏறிவிடவேண்டுமென்று எனக்குத் தெரிந்த ஸாகஸம் எல்லாவற்றையும் உபயோகித்துப் பார்த்தும் அம்முரட்டுக் குதிரை எனக்குமேலும் ஸாகஸம் கற்றுக்கொண்டிருந்தது. அஃது என்னை நிமிஷத்துக்குள் நிலத்திற் றள்ளிவிட்டது. நான் அபஜயத்தினாலும் அவமானத்தினாலும் வருந்தி இப்பொழுது டில்லியில் இருந்து வருகிறேன்......"என்றிருந்தது.

"கண்மணி! இது வரையில் அக்குறையை உனக்குக் கொஞ்சமும் தெரிவிக்கவில்லை; மெல்ல மெல்லப் பதினைந்து வருஷங்களும் தொலைந்து போயின; அடுத்த வருஷத்தின் ஆரம்பத்தில் உன் தந்தை வந்து சேருவார்; நான் அவர் பிரிவுக்கு வருத்த மடையவில்லை; அத்தனை யரசர்களுக்கும் நடுவில் அவமான மடைந்ததற்குத்தான் வருத்த முறுகிறேன்; அவரடைந்த அவமானத்தை அகற்ற முடியாதல்லலா? ஆயினும் என்னால் வேறு என்ன செய்ய முடியும்?" என்று சொன்னாள்.

அதுவரையில் அமைதியுடன் கேட்டுக் கொண்டிருந்த அரசகுமாரன் ஆச்சரியத்தில் முழுகி அன்னையை வணங்கித் "தாயே! இவ்வவமானத்தை இத்தனை நாளும் தெரிந்துகொள்ளாததற்கு வருத்தப்படுகிறேன்; கழிந்துபோனவற்றை நினைப்

டதிற் பயன் கிடையாது; எனக்கு விடைதாருங்கள்! நான் டில்லிக்குச் சென்று அந்தத் துடுக்குக் குதிரையை யடக்கி என் றந்தையை மீட்டுவருகிறேன்; தாங்கள் என்னைப் பரிந்து வளர்த்ததன் பொருட்டாவது நான் தந்தையை மீட்டுவரவேண்டாமா? அவரை யழைத்துவராமல் இவ்வரண்மனையில் இருக்கவேமாட்டேன்" என்று கூறினான். பட்டமகிஷி பிள்ளையை அணைத்துக் கொண்டு "குழந்தாய்! என்னைத் துன்பக்கடலிற் றள்ளநினையாதே; உன் முகத்தைக் கண்டு பதிவியோகம் ஒருவாறு மறைந்து வருகின்றது; ஊன்றியகிளை வளைந்தசமயத்தில் தற்செயலாகக் கிடைத்த தாவின கிளையாவது துணை செய்யட்டும்; அவர் தாமாகவே அடுத்த வாண்டில் வந்து சேருவார்; அது தெய்வக்குதிரை; அரிய காரியங்களைச் செய்ய உனக்கு இன்னும் ஆண்டும் ஆற்றலும் அமையவில்லை. அதுவரையிற் பொறுத்துக்கொண்டிரு!" என்று சொன்னாள்.

ஜயஸிங்கு அன்னையின் அடியில் விழுந்து "அம்மா! என்னைத் தடாதிருங்கள்! நான் டில்லிக்குச் செல்லாமல் இருக்கவே மாட்டேன்; வருஷம் கழிந்தபிற்பாடு தந்தை வருவது விரும்பத்தக்கதன்று; என் மனம் எனக்குத் தைரியம் தருகின்றது; நான் குதிரையைக் கட்டாயம் அடக்கித் திரும்புவேன்" என்று சொல்லி வெளியில் வந்துவிட்டான். அவன் கடைசி வசனம் காதில் விழுவதற்கு முன்னரே ரமாபாய் மூர்ச்சை யடைந்துபோனாள். ஜயஸிங்கு அவ்வாயிலைக் கடந்து மகம்மதுகானைக் கண்டு அன்னைக்கும் தனக்கும் நடந்த சம்பாஷணைகளைத் தெரிவித்து 'உடனே டில்லிக்குப் புறப்படவேண்டும்' என்று சொன்னான். நண்பன் அதனை யாக்ஷேபிக்கவில்லை. அரசகுமாரன் உண்டு உடுத்து அரங்கநாதப் பெருமானை வணங்கி நண்பனை யழைத்துக் கொண்டு அப்பொழுதே பயணப்பட்டு விட்டான்.



# அதிகாரம் 7

## இராஜதரிசனம்

"மின்னென, விளக்கென, வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழில்த ழைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லால், அரோ
பொன்னுல காயதப் புலவர் வானமே." கம்பர்.

காலை ஏழரைமணி யிருக்கும். ஆகாயம் நீல விதானம் போலக் களங்கமற்று விளங்கிற்று. சூரியன் ஒளிக்கதிர் டில்லிப் பட்டணத்திற்பாய்ந்து அதனை அழகாக வலங்கரித்தது. இள்வெயிலின் காந்தியினுல் உத்தியானங்களும் அரண்மனைக் கட்டடங்களும் விநோதமாக விளங்கின. தானிய முதலிய பொருள்களைக் கொள்ளவும் கொடுக்கவுமாகச் சுற்றுப் பக்கங்களிலிருந்து திரள்திரளான வண்டிகள் வந்துகொண்டிருந்தன. வர்த்தகர்கள் கடைவீதிகளில் நவதானியங்களைக் குன்றங்கள்போலக் குவித்து விலைகூறி விற்கத்தொடங்கினுர்கள். மற்றவர்கள் உண்டும் உடுத்தும் வெளியில்வந்து தங்கள் தொழில்களைக் கவனிக்கலானுர்கள்.

அப்படிப்பட்ட தருணத்தில் அரசவீதியில் இரண்டு குதிரைகளின்மீது இளைஞரிருவர் வந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தோற்றம் அனைவரும் கவனிக்கத் தக்கபடி அமைந்திருந்தது. அவர்கள் அணியும் ஆடையும் தென்னுட்டுச் சிறுவரென்பதைத் தெளிவாக விளக்கின. இருவரிலொருவன் அரசகுமாரனுக விருக்கலாம். மற்றவன் தொடர்ந்தவனுகலாம். முருகக் கடவுளும் மதவேளும் போல முன்னவன் முகத்தில் அழகும் ஆற்றலும் அதிகரித்து விளங்கின. கம்பிரமான தோற்றத்தைக் கொண்டிருந்தான். அவன் இளை

மைக்குத் தக்கபடி அவனேறிவந்த குதிரையும் அழகு பெற்றிருந்தது. 'அகத்தினழகு முகத்திற் றெரியுமென்பது பொய்யாகாதானால், அவ்விளைஞன் தனதுள்ளத்தினும் தூய்மையுள்ளவனாக விளங்கவேண்டும். வேலையவசரத்தினால் துரிதமாகத் தெருவிற் சென்றவர்களும் அவனைக் கண்டதும் தங்கள் தொழில்களை மறந்துநின்று ஆச்சரியமடைந்தார்கள். அவ்வரசகுமாரன் தன்னைக் காண்பவர்களைக் கொஞ்சமும் கவனியாமல் குதிரையை நடத்திக்கொண்டு அரசர் கொலுக்கூடத்தை யடைந்தான். புதுமலரைக் கண்டதும் இசைபாடிப் படியும் வண்டினம்போல அங்குள்ளவர் கண்கள் அவ்விளைஞன் முகத்தில் மொய்க்கத் தொடங்கின. சிங்காசனத்திலிருந்த ஷாஆலம் முதலில் திடுக்கிட்டுப் போனார். அவர் மனத்தில் அவ்விளைஞனைப்பற்றிப் பலபலவிதமான வெண்ணங்கள் உதித்து வளர்ந்தன. அவருக்குச் சிங்காசனத்தில் அமர்ந்திருக்கவாவது, அன்றி எழுந்துநிற்கவாவது தோன்றவில்லை. அவர்செய்வது தெரியாமல் திகைக்கத்தொடங்கினார்.

அத்தருணத்தில் சிறுவரிருவரும் குதிரையை விட்டிறங்கிச் சிங்கக்குட்டிகள்போலக் கம்பீரமாக நடந்து ஷாஇன்ஷாவின் சமீபத்தில் வந்து சலாம் செய்து நின்றார்கள். அரசர் தம்மருகிலிருந்த இரண்டு உயர்ந்த வாசனங்களில் அவர்களை யமரப்பண்ணினார். அப்பொழுது அவ்விளைஞரிற் றலைவன் எழுந்து நின்று "அரசர் பெரும! நான் இருப்பது தென்னிந்தியாவிலுள்ள செஞ்சிப் பட்டணம்; என்னை ஜயஸிங்கென்று சொல்லுவார்கள்; இவன் எனது நண்பன்; பெயர் மகம்மதுகான்; என் தந்தையின் பெயர் தரணிஸிங்கு மன்னவர்; அவர் தங்களிடத்திலுள்ள ஒரு முரட்டுக் குதிரையின் காரணமாக இவ்விடத்தில் இருந்து வருகிறாரென்று கேள்வி; நான் அந்தக் குதிரையை நடத்தி அவரை யழைத்

துச் செல்ல வந்திருக்கிறேன்; மகாராஜாவே! தயவுசெய்து குதிரையைக் கொண்டுவரக் கட்டளையிடுங்கள்” என்று கூறினன்.

ஷா ஆலம் சந்தோஷத்தி லமிழ்ந்தித் “தைரியமுள்ள சிறுவனே! உன் வசனம் உன் பருவத்தையும் பொருள் பண்ணவில்லை; இத்துணை யிளம்பிராயத்தில் வழியின் வருத்தங்களையும் கவனியாமல் தந்தையைச் சிறைமீட்கும்பொருட்டு இவ்வளவுதூரம் வந்த உன்தைரியம் மெச்சத்தக்கது; அதனை நான் மிகவும் பாராட்டுகின்றேன்; உன் வரவுக்குக் காரணமான குதிரை அசாதாரணமானது; அதன் முரட்டுக் குணம் சொல்லத் தரமன்று; அந்தப் பொல்லாதகுதிரை ஸாகஸத்திலும் தைரியத்திலுஞ் சிறந்த எத்தனையோ உயர்ந்த வரசர்களை மானபங்கம் செய்துவிட்டது; அவ்வவமானம் உன்னையாவது வருத்தாதிருக்கட்டும்; உன் பராக்கிரமம் பழிப்பின்றி வளர்ந்து பலர்க்கும் பயன் படட்டும்; நீ தந்தையைச் சிறைமீட்க வந்திருக்கிறேனென்று சொல்லியதுவே லக்ஷம் குதிரைகளை நடத்தினதுபோலாகும்; தந்தையை அனுப்பிவிடுகிறேன்; அழைத்துகொண்டுசெல்! ஸாகஸமாகிய இவ்வருந்தொழிலைச் சாதிக்க நினைக்கவேண்டாம்”என்று சொன்னர்.

ஜயஸிங்கு மிகவும் வணக்கமாக “அறியாச் சிறுவனாகிய நான் சக்ரவர்த்தி யவர்களுக்கு அதிகமாக என்ன சொல்லப் போகிறேன்; குதிரையை நடத்தித் தந்தையை விடுவிப்பது ஒரு அரசகுமாரனுக்குப் பெருமையே யன்றிக், கும்பிட்டு மீட்பதிற் பெருமை கிடையாதல்லவா! வடவிந்தியாவிலுள்ள மன்னவர் பலரையும் அவமானப் படுத்திவந்த அடங்காக் குதிரையொன்றைத் தென்னிந்தியாவிற் பிறந்த சிறுவனொருவன் திறமையாக நடத்திப் பெருமை யடைந்தானென்ற

பெரும் புகழைத் தாங்கள் எனக்குத் தாருங்கள்! அரச குமாரர்களுக்கு அதுதான் அடைதற்கரிய சிறப்பு" என்று கூறினான்.

ஷா ஆலம் 'ஜயஸிங்கு! உனது வசனம் ஆச்சரியமானது; ஒருகால், அது செய்கையிலும் உண்மையாகலாம்; குதிரையை நடத்தின பிற்பாடு உனக்கு வரும் புகழ் அதிகமேயாகும்; ஆயினும், நான் அதனைச் செய்யச் சொல்லமாட்டேன்; பஹாதுஷா 'இளஞ்சிறுவனென்றும் பாராமல் குதிரையை நடத்தென்று கூறினான்' என்று என்னையே பலரும் பழிக்கத் தலைப்படுவர்; அந்தப் பழிச்சொல்லை எனக்குச் சொந்தமாக்குவதனால் நீ அடையும்பலன் என்ன?' வென்றான்.

ஜயஸிங்கு "அரசகேசரி! தங்கள் வசனம் என்மேலுள்ள வன்பை வெளியிடுகின்றது; அஃது எனது நற்காலமேயாகும்; எனக்குள் ஒன்று 'நீ குதிரையைக் கட்டாயம் நடத்துவாய்' என்று சொல்லி எனக்குத் தைரியம் தருகின்றது; மேலும், கீர்த்தியென்னும் கனி அனைவரும் எளிதிற் கொள்ளும் வண்ணம் கடைகளிற் கிடைப்பதில்லை; அஃது ஆபத்தென்னும் மரத்தின் அருங்கிளை நுனியிற்றான் பழுத்துத் தொங்கும்; க்ஷத்திரிய குமாரர்களுக்குத் தைரியம் சிறந்த கவசம்; அஃது என்னைக் காக்க மறந்துபோகாது; விடைதாருங்கள்; குதிரையை நடத்திவருகிறேன்" என்று பிடிவாதம் பண்ணினான்.

ஷா ஆலம் 'அற்புதச் சிறுவனே! பின்வருவனவற்றை முன்னிட்டறியும் சக்தி மனிதர்க்குக் கிடைப்பதில்லை; கடவுள் அந்தச் சக்தியைத் தாமே வைத்துக்கொண்டிருக்கிறார்; குதிரையை நடத்தென்றாவது, அன்றி நடத்தாதேயென்றாவது நான் கட்டளையிடமாட்டேன்; அதனைத் தீர்மானிக்

கும் பொறுப்பு உனக்கே யிருக்கட்டும்; டில்லிப் பட்டணம் வரையில் தள்ளிக்கொண்டுவந்த உன் நல்லதிருஷ்டம் மற்ற வற்றையும் நல்லதாக்கித் தரட்டும்; அதோ உன் தந்தை யிருக்கிறார்; இன்று முழுவதும் இளைப்பாறியிருந்து அவரு டன் கலந்து தீர்மானித்துக்கொள்! அப்புறம் உன் கருத்தின் வண்ணம் காரியம் நடக்கட்டும்' என்று சொல்லிச் சமாதா னப்படுத்தினார்.

உடனே தரணிஸிங்கு மன்னவன் எழுந்துவந்து ஜய ஸிங்கை அணைத்துக்கொண்டு உச்சி முகந்து முத்தமிட்டுச் சந்தோஷத்தினால் மயிர்சிலிர்க்கக் "குழந்தாய்! மிகவும் கொடி யதாகிய துன்பக் கடலைக் கடக்க நினையாதே; மெள்ளமெள்ள இவ்வருஷத்தோடு தவணையும் முடிந்துபோகின்றது; குதி ரையை நடத்தவேண்டுமென்று கனவிலும் கருதவேண்டிய தில்லை; ஏனென்றால், அதன் துடுக்குத்தனத்துக்கும் உன் வயதின் சிறுமைக்கும் நெடுந்தூர மிருக்கின்றது; வேண்டுமா யின் ஷா இன் ஷாவினிடத்தில் இப்பொழுதே கட்டளை பெற்றுக்கொண்டு செஞ்சிப் பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போகலாம்" என்று சொன்னான்.

ஜயஸிங்கு நிலத்தில் விழுந்து வணங்கித் "தந்தையே! தங்கள் வசனம் அன்பை வெளிப்படுத்தி ஆற்றலை மறைத்து விடுகின்றது; நான் குதிரையைக் கட்டாயம் நடத்துவேன்; அதிற் கொஞ்சமும் சந்தேகம் கொள்ள வேண்டாம்; குதி ரையை நடத்திச் செஞ்சிக்குச் செல்வது சிறந்த புகழல் லவா! என் கடமையை நான் செய்து முடிக்கிறேன்" என்று கூறினான்.

சபையிலுள்ளவர்கள் 'ஷா இன் ஷாவும் தந்தையும் சொல்லிய வசனங்களை இவன் சற்றும் பொருள் பண்ணவே

யில்லை; தைரியமே வடிவம் கொண்டது போலவிளங்குகிறான்; இவன் முகத் தெளிவையும் விடாமுயற்சியையும் கவனிக்குமளவில் குதிரையை நடத்துவான் போலவே காண்கின்றது.

"மகன்றந்தைக் காற்று முதவி யிவன் றந்தை
என்னோற்றான் கொல்லென்னும் சொல்" திருவள்ளுவர்.

என்ற முதுமொழியை இவன் புதுப்பித்துவிட்டான்" என்று பலவுஞ் சொல்லிப் புகழ்ந்து கொண்டார்கள்.



## அதிகாரம்



### குதிரையேற்றம்

"குறைத்துக் கொளப்பட்டார் கோளிழுக்குப் பட்டுப்
புரைத்தெழுந்து போகினும் போவர்;—அரக்கில்லுள்
பொய்யற்ற வைவரும் போயினார்; இல்லையே
உய்வதற் குய்யா விடம்." மூன்றுறை யறையனார்.

ஜயஸிங்கின் வரவும், அதன் காரணமும் ஒருவரும் அறியாமலேயே பட்டண முழுவதும் பரவிப்போயின. சிலர் 'அவன் கேள்வியுற்ற வரையில் குதிரையை நடத்துவானென்றே காண்கின்ற' தென்றனர். இன்னுஞ் சிலர் 'ஸாகஸமும் துணிவு முள்ள எத்தனையோ பெயர்களுக்கு அவமானத்தை யுண்டுபண்ணின அந்தத் துடுக்குக் குதிரை இவ்வறியாச் சிறுவனைக் காலினாலேயே நசுக்கிக் கொன்று விடு' மென்றனர். வேறுசிலர் 'எல்லாம் நாளை யதிகாலையில் வெள்ளிடை மலையென்னத் தெள்ளிதின் விளங்கிவிடுகின்ற' தென்றனர். இங்ஙனம் ஒவ்வொருவரும் வாய்க்கு வந்தபடி சொல்லி மெள்ள மெள்ள அன்றிரவைக் கழித்தார்கள். விடியற்காலையில் சேவல்கள் 'எங்கள் கடவுள் போலவே அறியாப் பருவத்தில் அடங்

காத குதிரையை அடக்க வந்திருக்கும் இளைஞனைக் காண எல்லாரும் வாருங்க'ளென்று எழுந்து கூவின. காகங்கள் 'ஜயஸிங்கைக் குதிரை யேற்றத்தில் காப்பாற்றுங்க'ளென்று கடவுளை வேண்டுவனபோலக் 'கா ! கா!' வென்று கத்தின. மலர்கள் அவன் பராக்கிரமமும் புகழும் போல இதழ்விரிந்து மணம் பரந்தன. அவன் புகழ்க் கதிர்போலக் கிழக்குத் திக்கு கொஞ்சம் கொஞ்சமாக வெளுக்கத்தொடங்கிற்று. அவ்வளவில் அரண்மனைப் பேரிகை குமு குமுவென்று குமுறி யொலித்தது. அப்புறம் அருணனும் கீழ்த்திசையில் அழகாக உதயமாயினன்.

குதிரைப் பந்தயச்சாலை ஒரு பரந்த மைதானத்தில் அமைந்திருந்தது. அரண்மனைப் பரிசாரகர்களிற் சிலர், விரிப்புக்களும் ஆசனங்களுமேற்றிய வண்டிகளைத் துரிதமாக வோட்டிச் சென்றார்கள். சிலர் அம்மைதானத்தில் சக்ரவர்த்தியும் சிற்றரசர்களும் தங்குவதற்கென்று ஓரிடத்தில் மேற்கட்டிகளையும் விரிப்புக்களையு மமைத்து ஆசனங்களிட்டு அலங்கரித்தார்கள். சிலர் 'இவ்விடம் பட்டதாரிகளுக்கு; இவ்விடம் மகுடமன்னவர்களுக்கு; இவ்விடம் மந்திரிமார்களுக்கு; இவ்விடம் படைவீரர்களுக்கு; இவ்விடம் பெரிய மனிதர்களுக்கு; இவ்விடம் எளிய ஜனங்களுக்கு;' என்றுகயிறுகட்டித் தடுத்தும், விளம்பரமெழுதி யொட்டியும், ஆசனம் பொலியவமைத்தும் அறியச் செய்தார்கள். இன்றியமையாத திண்பண்டங்களையும், பானவகைகளையும், பழவகைகளையும் வியாபாரிகள் அங்குத் தகுந்த விடங்கள் பார்த்துப் பரப்பியிருந்தார்கள். சிலர் நடைக்கடைகளைத் தலையிற் சுமந்து அங்கு மிங்குமாகத் திரிந்தும் கூவியும் விற்றுவந்தார்கள். தெருக்களிலும் சாலைகளிலும் சாவற் சிப்பாய்கள் நின்று 'போகும் வழியிது; வரும் வழியிது' வென்று அனைவருக்கும் அறிவித்துக்கொண்

டிருந்தார்கள். அந்தப் பட்டணவாசிகள் நண்பர்களோடும், நாயகிகளோடும், நன்மக்களோடும் தங்களை நன்றாகச் சிங்காரித்துக்கொண்டு நடந்தும், வாகனங்களிலமர்ந்தும், வரிசை வரிசையாக வந்துகூடினார்கள். முடிவாய்ச் சொல்வோமானால், அன்று காலை எட்டுமணிக்குள் பந்தயச்சாலையில் எள்ளிடவும் இடமில்லாமல் ஜனங்கள் வந்து நிறைந்துவிட்டார்கள்.

அப்பொழுது அடுக்காகக் குண்டுகள் ஒலித்து அரசர் புறப்பாட்டை யறிவித்தன. அரண்மனை வாத்தியங்கள் கடலின் அலைபோல மாறிமாறிக் கிளம்பியும், அவற்றின் இரைச்சல் போல இடைவிடா தொலித்தும், அங்குள்ளவர்களுக்கு ஆநந்தத்தை விளைத்தன. ஷா ஆலமும் சிற்றரசர்களும் ஜயஸிங்கை முன்னிட்டுக் கொண்டு அங்குவந்து சேர்ந்தார்கள். ஜனங்கள் எழுந்து நின்று தங்கள் பணிவைத் தெரிவிக்க, அரசர்க்கரசர் அனைவரையும் 'உட்காருங்க'ளென்று கையமர்த்தித் தாமும் ஆசனத்திலமர்ந்தார்.

பின்னர் அவ்வொப்பற்ற குதிரை காட்சிச் சாலைக்குக் கொண்டுவரப்பட்டது. இருபது வீரர்களுக்கும் அதிகமாக அதனை நெருங்கி நின்று எச்சரிக்கையுடன் காவல் செய்து வந்தார்கள். பசும் பொன்னாலும் இரத்தினத்தாலுமாகிய அதன் சேணம் அனைவரும் கண்டு ஆச்சரியப்படும்படி அழகாக விளங்கிற்று. அப்பொழுது ஜயஸிங்கு ஆசனம் விட்டெழுந்து ஷா ஆலத்தைப் பணிந்து "அண்ணலே! இந்தப் பெரிய சபையின் முன்னர்க் குதிரையை நடத்த எனக்கு அநுமதி தாருங்கள்" என்று கேட்டான். அரசர் "அன்புள்ள ஜயஸிங்கு! குதிரையை நேரிற் காணுகின்றேன்; அதன் பலத்தின் பெருமையை நன்றாக ஆலோ

சனை செய்துபார்! முதலில் உனது வயதைத் தெரிந்துகொள்! இரண்டாவது இந்தப் பெரிய குதிரையை நடத்தமுடியுமா வென்பதைக் கவனி! மூன்ருவது நடத்துவதன் பெருமையை யும் தவறுவதன் இழிவையுமெண்ணு! நான்காவது அதற்கு ஆகவேண்டிய துணைக் கருவிகளைச் சிந்தித்து அவற்றில் நீ அடைந்திருப்பவை எம்மாத்திர மென்பதைக் கருது! யாவும் சரிவர அமைந்திருக்குமாயின் காரியத்திற் றலையிடு! இப்பொழுதுகூட ஒன்றும் மிஞ்சிப் போகவில்லை" என்று கூறினர்.

ஜயஸிங்கு "அண்ணலே! முடிவு செய்து கொண்டுவிட்டேன்; முன்வைத்த காலைப் பின்னுக்கு இழுத்துக்கொள்வது அரச குமாரனுக்கு ஆண்மையாகாது; இத்தனை பெயரும் என் குதிரை யேற்றத்தைக் காண இங்கு வந்து கூடியிருக்கிருர்கள்; அவர்கள் விருப்பமும் நிறைவேறட்டும்; எனக்கு உண்மையில் அதைரிய முதிக்கவில்லை; குதிரையைக் கண்டதும் உற்சாக மதிகரிக்கின்றது; விடைதாருங்கள்" என்று சொன்னுன்.

ஷா ஆலம் 'உன் தைரியம் துணைபுரிக! கடவுளும் கருணைசெய்க' என்ருர். உடனே ஜயஸிங்கு சிங்கக் குட்டிபோல நடந்து குதிரையின் சமீபம் சென்ருன். ஜனங்கள் 'ஜய ஜய' வென்று கைக் கொட்டிச் சந்தோஷம் கொண்டாடினர்கள். சிலர் 'சிறுவன் சிறுவ' னென்று சத்தம் செய்தார்கள். சிலர் 'நடையின் கம்பீரத்தைப் பாருங்க' ளென்ருர்கள். இன்னுஞ் சிலர் 'அந்தப் பொல்லாத குதிரை இந்த சிறுவனைப் பொருள் செய்யுமோ' வென்ருர்கள். பின்னுஞ் சிலர் 'உருண்டோடும் பெரிய தேரைப் பிறழாமல் நடத்துவது மிகவும் சிறிய அச்சாணி யல்லவோ' வென்ருர்கள். வேறு சிலர் 'இவன் குதிரையை மாத்திரம் நடத்தி விட்டால், இந்நாணிலத்தில் இவ

னைக்காட்டிலும் அதிருஷ்டசாலி ஒருவருமில்லை' யென்றார்கள். மற்றுஞ் சிலர் 'எப்பொழுதும் இன்பத்திடர்கள் துன்பக் கடலின் நடுவிற்றான் துலங்கிவருகின்ற' தென்றார்கள்.

இவர்கள் இங்ஙனம் மனம் வந்தபடி பேசிக்கொண்டிருக்க, ஜயஸிங்கும் மகம்மதுகானும் குதிரையை ஒரு முறை சுற்றி வந்து அதன் உத்தம விலக்கணங்களைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார்கள். பின்னர் ஜயஸிங்கு "நான் இதன்மீது நன்றாக வேறும் வரையில் நீங்கள் இப்படியே பிடித்துக் கொண்டிருங்க' ளென்று குதிரைப் பாலகர்களுக்குக் கட்டளையிட்டு, மகம்மதுகானை 'நீ கலினக் கயிற்றைப் பிடித்துக்கொள்' ளென்றான். அவர்கள் அவன் கட்டளையை அப்படியே நிறைவேற்றினார்கள். அவனுக்கு முன்னர் அந்தக் குதிரையை நடத்தவந்தவர்களில் ஒருவராவது அங்ஙனம் செய்யச் சொல்லவில்லை. வல்லமையினாலும் ஸாகஸத்தினாலும் அதன்மீது தாங்களே வலுவில் ஏறிவிட முயற்சி செய்தார்கள். அந்தக் காரணத்தாலேயே அவர்களுக்குக் குதிரையின்மீது உட்காரவுங்கூடத் திறமையுண்டாகவில்லை.

ஜயஸிங்கு தன் வழிபடு கடவுளாகிய அரங்கநாதப் பெருமானை வணங்கிக், குதிரை தன்னை எதிர்பாராத தருணத்தில் அதன்மீது புலிப் போத்தெனப் பாய்ந்து கடிவாளக்கயிற்றைப் பிடித்துக் கொண்டான். அப்புறம் மகம்மதுகானும் காவலர்களும் தங்கள் பிடிகளைவிட்டு எச்சரிக்கையுடன் விலகிக் கூட்டத்திற் கலந்து கொண்டார்கள். பிறந்தது முதல் ஒருவரையும் சுமந்தறியாத அந்தப் பெருங்குதிரை, தன்னை அசதியிலேமாற்றித் தன்மீதமர்ந்த சிறுவன் ஸாகஸத்துக்குச் சினந்து அதிகதிகொண்டு பறக்க வாரம்பித்தது. அந்தப் புரவியின் கடுநடைக்கு முன்னர் இலங்கைச் சண்டையில்

சஞ்சீவி கொணரச்சென்ற வீரனும் சரியாகமாட்டான். அஃது அந்தப் பரந்த மைதானத்தில் மாறிமாறியும், தாவியோடியும், அவனை நிலத்திற் றள்ளத் தனக்குத் தெரிந்த உபாயம் பல வற்றையும் மனம் வந்தபடி உபயோகிக்கத் தொடங்கிற்று. அது சற்றுநேரம் அம்புபோல நேராகப் பறக்கும். சற்றுநேரம் பாம்புபோல வளைந்து வளைந்தோடும். சற்றுநேரம் முன்னங் கால்களைத் தூக்கிக்கொண்டு பின்னங் கால்களினால் தவளைப் பாய்ச்சல் போலத் தாவிக் குதிக்கும். சற்றுநேரம் வேட்டைநாய்களுக்குத் தப்பியோடும் முயல் போல நான்கு கால்களும் நிலத்திற் படியாமல் நிமிஷத்துக்குள் பறந்து மறையும். சற்றுநேரம் கோபத்தினாற் கனைத்து அனைவர் மனமும் திடுக்கிடச் செய்யும்.

சுற்றிலு முள்ளவர்களுக்குக் குதிரையும் ஜயஸிங்கும் கொஞ்சமும் தெரியவில்லை. குதிரை உதைத்துக் கிளப்புதலாலுண்டான துகள் உயரப்பறந்து சூரியனையும் சூழ்ந்து கொண்டது. ஜயஸிங்கு குதிரையின்மீ திருக்கின்றானா? அன்றி நிலத்தில் விழுந்து அதன் காலினா லுதையுண்டு உயிரிழந்தானா வென்றுகூட அரசர் முதலியவர்களால் நிச்சயிக்க முடியவில்லை. அவர்கள் பலவாறு கலவர மடையத் தொடங்கினார்கள். அச்சமயத்தில் மகம்மதுகான் 'அரசகேசரி! தாங்கள் கவலைகொள்ள வேண்டாம்; குதிரையின் கனைப்பொலி அடிக்கடி கேட்டு வருகின்றது; துகள் அதிகமாக வெழும்பி ஆகாயத்திற் பரவுகின்றது; இவ்விரண்டும் என் நண்பன் இன்னமும் விடாமல் நடத்துகின்றானென்பதை நன்றாக வலியுறுத்து' மென்று ஆறுதல் சொல்லித் தேற்றினான்.

இது நிற்க, இரண்டு மணி சாவகாசத்துக்கும் அதிகமாக ஜயஸிங்கு அந்த முரட்டுக் குதிரையை அதன்மனம்

வந்தபடி நடக்க விட்டுவிட்டான். அத்துரகம் அவனைக் குப்புறத் தள்ளுவதற்குப் பலவிதத்தில் முயன்றும் பயன்பெறவில்லை. அதனுடல் முழுவதும் வியர்த்தது. வாய் மிகவும் நுரைத்தது. அவனுக்கு அடங்கி நடந்தாலன்றித் தனக்கு மீட்சியில்லையென்பதை அஃது அப்புறம் நன்றாக வுணர்ந்து கொள்ளத் தொடங்கிற்று. அரசகுமாரனுக்கும் களைப்பில்லாமற் போகவில்லை. குதிரையைக் காட்டிலும் அதிகமாகவேயிருந்தது. ஆயினும் அதனைப் பாராட்டாமல் தனது ஒப்பற்ற தைரியத்தினாற் கலினக் கயிற்றைக் குலுக்கியும், காலினால் அதன் வயிற்றிலிடுக்கியும், சவுக்கினாற் சுருக்கென வடித்தும், அதனை அதட்டி நடத்தலானான். பற்கள் பிடுங்குண்ட பாம்புபோல அப்புறம் அந்தக் குதிரையின் முரட்டுக் குணங்களில் ஒன்றும் முன்னுக்கு வரவில்லை. தலைவன் குறிப்பறிந்து நடக்கும் வேலைக்காரன்போல அது ஜயஸிங்கின் கட்டளைக்குக் கீழ்ப்படியத் தொடங்கிற்று. 'குதிரை முற்றிலுமடங்கிப் போயிற்று; இனித்தனக்குக் கொஞ்சமும் அபாயம் கிடையா' தென்பதை அம்மன்னவன் மகன் நன்றாக வறிந்துகொண்டான்.

இருவகைச் சாரியும் எதிர்ந்து, வட்டமாய்
வருவழி ஞெகிழிபோல், மறுகெலாம் ஒரு
துரகதமே நிலை நின்ற தோற்றமொத்து,
ஒருவற நடத்தினன் ஒருக ணத்தினே.'

பரஞ்சோதி முனிவர்.

அதன்மேல், அந்தக் குதிரையை அனைவரும் கண்டு சந்தோஷத்தினால் 'சபாஷ்! சபாஷ்' என்றும் 'பேஷ்! பேஷ்!' என்றும் கைக்கொட்டி ஆரவாரிக்கும்படி சவாரி செய்து சக்ரவர்த்தியின் எதிரிற் கொணர்ந்து நிறுத்தினன். உடனே மகம்மதுகான் குதித்துக்கொண்டு சென்று குதிரை

யைத் தட்டிக் கொடுத்து 'அரிய நண்பனே! நின்வெற்றி குற்ற மற்றதாகுக' என்று சொல்லி அவனைக் கீழே யிறக்கி அழைத்து வந்தான்.

ஷா ஆலத்துக்குச் சந்தோஷத்தை அடக்க முடியவில்லை. அவர் ஆசனம் விட்டெழுந்தார். ஜயஸிங்கைத்தம் மடியிலுட்காருவித்துக் கைத்துண்டினால் முகத்திலுள்ள வியர்வைகளைத் துடைத்தார். உச்சி மோந்து முத்தமிட்டார். 'ராஜா ஜயஸிங்கு! ராஜா ஜயஸிங்கு!' என்று உரக்கக் கூவி யணைத்துக் கொண்டார். உடனே அங்கிருந்தவர் யாவரும் 'ராஜா ஜயசிங்குக்குஜேய்! ராஜா ஜயசிங்குக்குஜேய்!' என்று வானத்தின் வயிறு கிழியும்படி கூச்சற் போட்டார்கள். பின்னர்ப் பஹதுஷாவின் கட்டளையினால் பாலகர்கள் புரவியைப் பந்தியிற் சேர்த்துப் புல்லும் தண்ணீரும் பரிந்து வைத்தார்கள்.

ஷா ஆலம் தரணிஸிங்கை நோக்கி "வீரபுருஷனே! நீ நல்ல புண்ணியம் செய்திருக்கின்றனை; நான் விரும்பினபடி கடவுளும் நன்றாகக் கருணை புரிந்தனர்; ஜயஸிங்கு இன்றும் நாளையும் இஷ்டம் போல விளைப்பாறி யிருக்கட்டும்; அறியாச் சிறுவன்; அதிகமாகக் களைத்துப் போய் விட்டான்; எல்லாரும் எழுந்திருங்கள்! அரண்மனை செல்லலாம்" என்று சொன்னார். உடனே அரண்மனை வாத்தியங்கள் முழங்கின. ஜனங்கள் அன்று வேடிக்கை அவ்வளவுடன் முடிந்துவிட்ட தென்று வீடுகளை நோக்கி விரைந்து சென்றார்கள். அரசனும் ஜயஸிங்கும் மற்ற அரசர்களோடு அரண்மனை அடைந்தார்கள்.



## அதிகாரம் 9

### திருமணம்

உயிர்கள் யாவும் உயர்ந்த தென்று விரும்பும் உத்தம வரங்களிற் சந்தோஷம் ஒன்று. அஃது ஒவ்வொருவர் உள்ளத்திலும் உதித்து வளர்கின்றது. காற்றின் குணமும் சந்தோஷத்தின் குணமும் ஒன்று. இரண்டுக்கும் வடிவம் கிடையாது. இரண்டையும் செயலிற்றான் காணலாம். இரண்டும் ஓரிடத்திலாவது நிலைத்துத் தங்குவதில்லை. உலக முழுவதும் ஓடி யுழல்கின்றன. காற்று ஆகாயத்திலமரும். சந்தோஷம் உள்ளத்தி லொடுங்கும். இரண்டும் உயர்ந்தவ ரிடத்திலும் இழிந்தவ ரிடத்திலும் ஒருமிக்கச் சென்று உறவு கொண்டாடும். சந்தோஷத்தின் வரவுக்கு அனைவரும் மகிழ்வர். அஃது ஒருவனுக்கு ஒருழக்குக் கடலைச் சுண்டலிலும், சிறிய பைசா வளவிலும் வெளிப்படும். வேறொருவனுக்கு உயர்ந்த விருந்திலும் இலக்ஷம் வராகன் இலாபத்திலும்கூட வெளிப்படாமல் மறையும். வரவின் காரணம் எப்படி யிருந்தாலும் சந்தோஷம் மாத்திரம் அனைவருக்கும் ஒன்றுதான். கள் குடித்தவனுக்கும் சந்தோஷமுள்ளவனுக்கும் சற்றும் பேதம்கிடையாது. மதுபானம் ஒருவனைத் தன்னிஷ்டப்படி கூத்தாட்டுவிப்பது போலவே, சந்தோஷமும் ஒருவனைத் தன்னிஷ்டப்படி கூத்தாட்டுவிக்கும். சந்தோஷ சமயத்தில் ஆயிரம் பொன்னை அரைக்காசுக்கும் அற்பமாக மதித்துச் செலவு செய்வதைக் காணலாம். அது மூலையிலிருந்துகொண்டு மவுனம் சாதிப்பவனையும் முன்னுக்கிழுத்து வசனிக்கப் பண்ணும். ஆராய்ந்து பார்க்குமிடத்தில் மனிதரி னறிவை மயக்குவிப்பது சந்தோஷத்திற்கு இலக்கணம் போதும்.

• • •

ஷா ஆலம் சபையில் சந்தோஷம் நடனம் செய்தது. ஜயஸிங்கின் ஆசனம் அரசன் சிங்காசனத்துக்கு அருகிலிருந்தது. அவன் தன்னை அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்தான். அனைவர் கண்களும் அவனைவிட்டு அப்புறம் பெயரவே யில்லை. டில்லி யரசர் அப்படிப்பட்ட சந்தோஷத்தை ஒருநாளும் அடைந்திருக்க மாட்டார். அவர் வாய் ஜயஸிங்கைப் புகழ்ந்து பேசிற்று. கைகள் அச்சிறுவனுக்குப் பலவிதமான அலங்காரங்களைச் செய்தன. கண்கள் அவ்விளைஞனை யல்லாமல் மற்றொன்றையும் நோக்காவாயின. ஜயஸிங்கைக் கனப்படுத்தும் நிமித்தம் அவர் தமது பெருந்தன்மையைமறந்து ஒரு சாதாரண மனிதன்போல நடந்துகொள்ளத் தொடங்கினார். ஆனால், அந்தப் பெரிய கவுரவம் ஜயஸிக்குக்கு அதிகமானதன்று. அதனிலும் உயர்ந்த கீர்த்தியை யடைவதற்கும் அவன் தகுதி யுள்ளவன்றான்.

அத்தருணத்தில் இராணுவ வுடை புனைந்து அரசர் அருகி லமர்ந்திருந்த ஒரு பெரிய பிரபு ஆசனம் விட்டெழுந்திருந்தார். அவருக்கு வயது சற்று முன் பின்னாக நாற்பது இருக்கலாம். அவர் இடையிற் புனைந்திருந்த உடைவாள் பாதம் வரையிலும் நீண்டு தொங்கிற்று. அவர் ஷா ஆலத்தின் தலைமைச் சேனாதிபதி. அவருக்குப் பீமஸிங்கு என்றுபெயர். அவர் பகைவர் கோட்டைகளைப் பலதடவை முற்றுகையிட்டு வெற்றிமாலை புனைந்திருக்கிறார். அவர் அநாவசியமாக, அல்லது பதட்டமாக ஒருநாளும் பேசவே மாட்டார். நிதானமும் பொறுமையும் நிரம்பப்பெற்றவர். அத்தனை பெயரும் அவர் சொல்லப் போவதை ஆவலுடன் எதிர்பார்க்கத் தொடங்கினார்கள்.

அவர் "அரசர் தலைவரே! எல்லா வரசர்களுக்கும் தலையிறக்கத்தை யுண்டுபண்ணி வந்த நமது துடுக்குக் குதிரையை

யடக்கி அரும் புகழ்படைத்த இவ்வொப்பற்ற வெற்றி வீர னுக்கு எனது செல்வப் புதல்வியைக் கன்னிகாதானம் செய்ய விரும்புகிறேன்; அவளுக்கு இப்பொழுது வயது பன்னிரண்டு; தரணிஸிங்கு மன்னவரும் தாங்களும் எனதுவிண்ணப்பத்தை அங்கீகரிக்க வேண்டும்'' என்று சொன்னார். சபையி லிருந்த வர்கள் 'தகும் தகு' மென்று கூறினார்கள்.

டில்லி யரசர் 'பீமஸிங்கு! உமது வசனம் சர்க்கரைப்பந் தலில் தேன்மாரி பொழிந்தது போல என் சந்தோஷத்தை அதிகமாக்கிற்று. அவ்வண்ணமே நிறைவேறும்படி கடவுள் கருணை செய்யட்டும்' என்று சொல்லிச் 'செஞ்சித் தலைவரே! எனக்குப் பெண்ணிருந்தால், ஜயஸிங்கை மருமகனாக்கிக் கொண்டிருப்பேன். அந்தப் பாக்கியம் நமது சேனாதிபதிக் குக் கிடைத்தது; அவர் மருமகன் எனக்கும் தான்; இருவரும் உயர்ந்த அரசகுலத்திற் பிறந்தவர்கள்; நம தரண்மனையிலே யே ஜயஸிங்குக்குத் திருமணம் நடக்கட்டும்'என்று கூறினார். தரணிஸிங்கு மன்னவன் 'மகாராஜாவே! ஜயஸிங்கும் நானும் தங்களுக்குச் சொந்தமானவர்கள்; தங்கள் விருப்பம் தடை யின்றி நிறைவேறட்டும்' என்று சொல்லி ஷா ஆலத்தைச் சந் தோஷப் படுத்தினான்.

பின்னர்ச் சபையிலிருந்த ஒரு ஜோதிட சாஸ்திரியினால் மணமுகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டது. தரணிஸிங்கு மன்ன வன் ஜயஸிங்கின் வீரத்தையும், அவன் திருமணத்தையும், அவற்றால் அரசனும் மற்றவர்களுமடைந்த சந்தோஷத்தை யும் தெளிவாக வரைந்து, செஞ்சிப் பட்டணத்துக் கனுப்பி னான். தநயன் தன்னை விட்டுப் பிரிந்தது முதல் ஊண் உறக்கம் கொள்ளாமல் அநவரதமும் அழுதகண்ணும் சிந்திய மூக்கு மாக விருந்த இராஜப்பெருமாட்டி ரமாபாய் கடிதத்தைக் கண்டமாத்திரத்தில்

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் ; தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்." திருவள்ளுவர்.

என்றபடி அளவற்ற ஆநந்த மடைந்து அந்தணர்க்குத் தானம்செய்தும், தேவாலயங்களுக்குத் திருவிழாவெடுத்தும், வேலையாட்களுக்கு வெகுமதி புரிந்தும், மந்திரிகளுக்கு விருந்து நல்கியும் பெருநாள் கொண்டாடித், தனது சந்தோஷத்தைத் தெரியப்படுத்தினாள். பின்னர் மந்திரி முதலானவர்கள் பட்டமகிஷியை முன்னிட்டுக்கொண்டு திருமணத் தினிமித்தம் டில்லிப் பட்டணத்துக்குப் பயணமானார்கள்.

தோரணம் நடுவார்கள் ; தூணுறை பொதிவார்கள் ;
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவார்கள் ;
காரணி நெடுமாடம் கதிர்மணி யணிவார்கள் ;
ஆரண மறைவாணர்க்கு அமுதினி தடுவார்கள்." கம்பர்.

ஷா ஆலத்தின் கட்டளைப்படி டில்லியின் அரண்மனை செம்மையாகச் சிங்காரிக்கப்பட்டது. ஜயஸிங்கின் விவாகத்துக்கு வேண்டிய எல்லா வேற்பாடுகளும் விமரிசையாக நடந்தேறின. அதற்குள் திருமணநாளும் நெருங்கி வந்தது. பட்டணத்திலுள்ளவர் மாடங்களையும் மாளிகைகளையும் மாசு துடைத்தார்கள். சுண்ணங்களையும் சித்திரங்களையும் சிறக்கத் தீட்டினார்கள். வாழைகளையும் கமுகுகளையும் வரிசையாக நாட்டினார்கள். ஈந்து, பனை, இளநீர் முதலிய குலைகளை எழில் பெறப் பூட்டினார்கள். அரசர் அடையாளக்கொடிகளை உயர தூக்கினார்கள். மாவிலை அசோகிலை முதலிய தழைகளோடு மகரதோரணங்களை வரிசையாகக் கட்டினார்கள். ஆறு கிடந்தது போன்ற அகன்ற தெருக்கள் முழுவதும் பச்சைப் பூம்பந்தல்களைப் பரக்க வமைத்தார்கள். புதுமணல் சொணர்ந்து நிலம் தெரியாமற் பரப்பினார்கள். பலநிறமுள்ள விரிப்புக்களைப் பெருமையுடன் விரித்தார்கள். தெருக்கள்தோறும்,

சந்திகள் தோறும் வாத்திய வொலிகளை யெழுப்பினார்கள். இங்ஙனம் பலவகையாலும் அந்தப்பட்டணம் புதுமையாகச் சிங்காரிக்கப்பட்டது.

செஞ்சிப்பட்டணத்திலிருந்து அனைவரும் வந்து சேர்ந்தார்கள். பஹாதுஷா பலருக்கும் செய்தி அனுப்பியிருந்தபடியினால், பல மன்னவர்கள் வந்திருந்தார்கள். சங்கீதத்தைத் தொனிக்கும் ஐவகைக் கருவிகளும் அழகும் அளவுமாக வொலித்து அனைவருக்கும் ஆநந்தத்தை விளைத்தன. அரண்மனை முரசு அதிர்ந்து முழங்கிற்று.

“சங்கினம் தவழ்கடல் எழில் தந்தன
சிங்கலில் அருமறை தெரிந்த தீர்த்தங்கள்,
கங்கையே முதலிய கலந்த நீரினால்
மங்கல மஞ்சனம் மரபின் ஆடினான்.” கம்பர்.

திருமண தினத்தின் அதிகாலையில் ஜயஸிங்கு அந்தணர் கொணர்ந்த நதிப்புனல்களில் நீராடி நித்திய கருமங்களை முடித்துக் கொண்டான். பூசுரர்களுக்குப் பெரிய தானங்களைப் பண்ணி அரச பரிசாரகர்களோடு அலங்கார வறையை அடைந்தான். பணியாளர் அவனுக்குப் பஹாதுஷா வனுப்பின ஆடைகளை யுடுத்தினர். இரத்தினாபரணங்களை யணிந்தனர். பூமாலைகளைப் புனைந்தனர். கலவைச் சாந்தங்களைத் திமிர்ந்தனர். அவர்கள் பல தொழில்களாலும் தங்கள் திறமை விளங்க ஜயஸிங்கைச் செம்மையாக அலங்கரித்து அழைத்துவந்தார்கள்.

பிற்பாடு, அவன் தெய்வயானைப் பிராட்டியைத் திருமணம் கொள்ளச்செல்லும் சிவகுமாரனென்னும்படி அரண்மனைவாயிலில் வந்து நின்ற அழகிய யானையின் மீதேறி,டில்லிப் பட்டணத்தின் இராஜவீதியில் பவனிவரத் தொடங்கினான்.

அந்தப் புராதன நகரத்திலிருந்த பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் ணென்ற ஒவ்வொரு வகுப்பினரும் மாடங்களிலும், மேடைக ளிலும், வாயில்களிலும், தெருக்களிலும் வந்து நெருங்கி நின்று, தங்கள் பருவத்துக்குத் தக்கபடி மணமக னழகைப் பருகி விடுபவர்போலப் பார்த்தும், அவன் வீரச்செயலை வியந் தும், மனங் கொண்டபடி புகழ்ந்தும், ஒருவருக்கொருவர் பேசியும், பொன்னையும் பொருளையும் வீசியும், மலரையும் சுண்ணத்தையு மிறைத்தும் தங்கள் சந்தோஷத்தைத் தெரி யப்படுத்தினார்கள். ஜயஸிங்கு பெரிய வீதி நான்கிலும் பவனி வந்து யானையினின்றும் இறங்கின மாத்திரத்தில் ஒழுக்கமும் வயதும் ஒருங்கே நிரம்பின உயர்குல ஸ்திரீகள் ஆலம் சுழற் றிக் கண்ணெச்சிலைக் கழித்தார்கள்.

"வளையொலி, வயிரொலி, மகர வீணையின்
கிளையொலி, முழவொலி, கின்ன ரத்தொலி,
தொளையொலி, பல்லியம் துவைக்கும் சும்மையின்
விளையொலி,கடலொலி மெலிய விம்முமே." கம்பர்.

பின்னர் அவன் வேதவொலி, வாழ்த்தொலி, வாத்திய வொலி முழங்க மணவறையை யடைந்தான். அவ்வறை முழு வதும் நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. கட்ட ழகு குடிபுகுந்து விளங்கும் பத்மினிபாய் என்பவளைப் புண் ணிய தீர்த்தங்களினால் நீராட்டி, வாசனைப்புகை யூட்டிக், கூந் தலைப் புலரப்பண்ணி, ஒப்பனைப் பெண்கள் அவளை ஒப்புயர் வற்றவளாகச் சிங்காரித்து மணவறைக்கு அழைத்துவந்தார் கள். அப்பொழுது அந்தணர்கள் அருமறை விதிப்படி அக் னியை வளர்த்தி மணச்சடங்குகளை மகிழ்ச்சியுடன் நிறை வேற்ற, ஜயஸிங்கு ஸ்ரீமகாலக்ஷ்மியின் மறுபிறப்புப் போன்ற பத்மினிபாய்என்றபெண்ணரசியைப் பாணிக்கிரகணம்செய்து

மணமாலைசூட்டி மாங்கலியம் தரித்தான். விவாகசமயத்தில் ஷா ஆலம் ஜயஸிங்குக்கு வைரமிழைத்த வாளாயுத மொன்றையும், பலவகை இரத்தினாபரணங்களையும், அவன் அடக்கி நடத்தின குதிரையையும் வெகுமதி யளித்தார். பீம ஸிங்கு மன்னவர் தமது செல்வக்குமாரிக்கு ஸ்ரீதனமாகப் பல வகைப் பொருள்களையும், பொன்னாபரணங்களையும், பச்சைக் கருப்பூரம் விளையும் பத்துக் கிராமங்களையு மளித்து, மரு மகனுக்கு யானை குதிரை முதலான பல வரிசைகளையும் மகிழ்ச்சியோடு தந்தார். மன்னவரிற் சிலர் மணமகனுக்கும் மணமகளுக்கும் பலவேறு வெகுமதிகள் புரிந்தார்கள்.

இங்ஙனம் ஏழெட்டு நாட்கள் வரையில் டில்லி யரண் மனையில் அந்த விவாகம் அதிக விமரிசையுடன் நடந்தே றிற்று. மணம் காண வந்தவர்கள் விருந்துகளாலும், வேடிக் கைகளாலும், வெகுமதிகளாலும் மகிழ்ச்சியடைந்து தங்கள் தங்கள் இருப்பிடம் சேர்ந்தார்கள்.

சிலநாள் கழித்துத் தரணிஸிங்கு மன்னவன் ஒருநாள் டில்லி யரசரைப் பணிந்து 'பட்டணம் செல்லக் கட்டளை வேண்டும்' என்றான். ஷா ஆலம் ஜயஸிங்குக்குத் தம் கரத்தி னால் உயர்ந்த வாபரணங்களை யணிந்து அவனைத் தழுவிக் கொண்டு "ராஜா ஜயஸிங்கு! நான் உன்னை ஒருநாளும் மறக்க முடியாது; டில்லியையும் என்னையும் மறவாமல் இரு; இன்று முதல் நீ செஞ்சிப் பட்டணத்திலிருந்து திறை யனுப்பவேண் டியதில்லை" என்று சொன்னார். ஜயஸிங்கு 'அரசகேசரி! தங் கள் பெருந்தன்மை மறக்கத் தக்கதன்று; அது பசுமரத்தாணி போல அடியேன் மனத்திற் பதிந்திருக்கின்றது; மற்றவற்றிற் குக் கட்டளைப்படி நடந்து கொள்கிறேன்' என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டான். டில்லி யரசர் தம்மிடத்தில்

விடைபெற வந்த மகம்மதுகானுக்குத் தாம் ஏறி நடத்தும் நீலவேணி யென்ற உயர்ந்த குதிரையையும், மற்றும் வெகு மதிகளையும் அளித்தனுப்பினர். தரணிஸிங்கு மன்னவன் மகனையும் மருமகளையு மழைத்துக்கொண்டு பிரயாணப்பட்டு நன்முகூர்த்தத்தில் செஞ்சிப் பட்டணம் வந்து சேர்ந்தான்.

## அதிகாரம் 10

### அரசர்ப்பிறழ்ச்சி

"ஆவது விதியெனின் அனைத்தும் ஆயிடும்;
போவது விதியெனின் எவையும் போகுமால்;
தேவருக் காயினும் தீர்க்கத் தக்கதோ?
ஏவரும் அறியொணு வீசற் கல்லதே."

**கச்சியப்ப சிவாசாரியர்.**

ஒரு தினத்தைச் சூரியன் சந்திரனென்ற இரண்டு சுடர்களும் அலங்கரிக்கின்றன. இரண்டின் பயனும் உலகத்துக்கு ஒளியைத் தருவதானுலும் வேறுபாடுகளும் இல்லாமற்போக வில்லை. சூரியனொளியில் உலகம் கண்விழிக்கின்றது. அது பல துறைகளிலும் புகுந்து பரபரப்புடன் பாடு படுகின்றது. அரவிந்தம் மலர்கின்றது. அல்லி குவிகின்றது. சந்திரனொளியில் உலகம் இளைப்பாறுகின்றது. இன்பமயமான நித்திரையடைகின்றது. அல்லி மலர்கின்றது. அரவிந்தம் குவிகின்றது. சூரியன் மறைந்து சந்திரன் வெளிப்படுவதற்கு இடையிலுள்ள மிகவும் சொற்பகாலத்துக்கு அந்தி யென்று பெயர். அதுசற்று நேரம்தான் இருக்குமானுலும், அந்தக் காலத்துக்குள் அஃது உலகத்தைத் தன்னிஷ்டம்போல வாட்டி அதிகாரம் செலுத்திவிடும். அதன் ஆளுகையில் பசுக்கள் பால்தரும்.

அரசன் வரவிற் களிக்கின்ற குடிகள் போல அரிவையர் தங்களை அழகாக அலங்கரித்துக்கொள்வார்கள். வீடுகளும் கடைவீதிகளும் விளக்குக்களால் சிங்காரிக்கப் படுகின்றன. பவளமல்லிகை, மல்லிகை; முல்லை முதலிய சிலபூக்கள் மலர்ந்து வாசனை வீசும்.

சிலர் பகலை விரும்புவர். சிலர் இரவை விரும்புவர். சிலர் அந்தியை விரும்புவர். சிலர் இரண்டை விரும் புவர். இன்னுஞ் சிலர் மூன்றையும் விரும்புவர். அன்றி மூன்றையும் வெறுப்பர். ஏனென்றால், தெவிட்டாத ஞானபலமும் தெவிட்டாத பொறிகளும் மனிதர்களுக்குக் கிடைக்கவில்லை. அதன் பொருட்டுத்தான் கடவுள் அநுபவிக்குமிடத்தில் இன்ப துன்பங்களை மாற்றி மாற்றி யமைத்திருக்கிறார். மனிதர் மனம் நிமிஷத்துக்குள் நிறம் மாறுகின்ற பச்சோந்தி போன்றது. விருப்பமானவற்றின் மீதும் அதற்கு விடாப்பிடி யுண்டாவதில்லை. காட்டில், தானே சென்று செடிக்கொரு தழையாக மாலைவரையில் மேய்ந்தும் வயிறு நிறையப்பெருத வெள்ளாட்டைப்போல, மனிதர் மனம் ஒவ்வொன்றையும் விரும்பி முடிவில் ஒன்றிலும் அமைதி யடையாமற் போகும்.

இனி அரசாட்சியைக் கவனிக்கலாம். ஓரரசன் மாறி அவன் சிங்காசனத்தில் மற்றொருவன் வந்து அமருவதற்குள் அவன் ஆளுகை பலவிதமான மாறுதல்களை அடைந்து விடுகின்றது. புதிய வரசனுக்குப் பழைய ஒழுங்குகள் விபரீதமாகத் தோன்றும். அவனுக்குப் பழையது ஒன்றும் கிடையாது. முழுவதும் புதியதுதான். பலர் புதுவது புனைந்தும், கோளுரை பகர்ந்தும், அவன் தயவுக்குப் போட்டி செய்வர். அதனால், பழைய மந்திரிகளிற் சிலர் புறக்கணிக்கப்படுவர். அவர் உத்தியோகத்துக்கு வேறு சிலர் ஆசைகொண்டு முயல்வர்.

புதிய வரசன் அன்பும் ஆதரவும் ஓரிடத்திலிறங்கும். அவை இராஜாங்கத்தில் பொருமை வஞ்சனை முதலிய சில மனக் குற்றங்களுக்கு விதை முளைகளாகும். அம்முளைகள் களையப் படாமல் அப்படியே வளர்ந்து வழியை மறைத்து விட்டால் அரசாட்சியென்னும் தேர் அவற்றிற் சிக்குண்டு அடியோடு கவிழ்ந்துபோகும். இவ்வளவும் புதிய வரசாட்சியின் விளைச் சல். இடைவிடாமலுருளும் காலசக்கரத்தின் ஓட்டத்தைப் பிடிக்க எப்படிப்பட்ட மோடார் வண்டிகளுக்கும் தந்திக் கம்பிகளுக்கும் கூடத் திறமை யமைவதில்லை. அஃது ஒரு கைதேர்ந்த ஜால வித்தைக்காரன்போல உலகத்தை ஒரு நிமி ஷத்தில் மாற்றி மயங்கச் செய்கின்றது.

கி. பி. 1711-ல் ஷா ஆலம் சுவர்க்கத்துக்குச் சென்றார். அவனுக்குப் பின்னர் ஜஹந்தரென்பவர் சிங்காசனமேறினார். அவர் அரசாட்சி வருஷத்துக்குமேல் நிலைத்திருக்கவில்லை. அவரையும் அவரை யாட்டிவந்த ஸுல்பிர்கர்கான் என்பவனை யும் பரக்ஸியரென்றவன் படுகொலைசெய்து சிங்காசனத்தைக் கைப்பற்றிக் கொண்டான். அவனுக்கு ஸைதுல்லாகான் என் பவன் நெருங்கின நண்பன். அவன் பரக்ஸியாரால் தென்னிந் தியாவுக்குப் பிரதிநிதியாக்கப்பட்டான். பஹதுஷாவின் பிரதி நிதிகளாக நியமனம் பெற்று வரும் தென்னிந்தியாவின் நவாப் புக்களுக்குத் தொண்டை நாட்டிலுள்ள ஆறுகாடு இராஜதா னியாக விருந்தது. ஆகவே, ஸைதுல்லாகான் ஆறுகாட்டுக்கு வந்து அதிகாரம் செலுத்தத் தொடங்கினான்.

"மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்,—நிலமிசைத்
துஞ்சினரென் றெடுத்துத் தூற்றப்பட்டா ரல்லால்
எஞ்சினர் இவ்வுலகத் தில்"

சமணமுனிவர்.

பிறந்தவர் வளர்வதும், வளர்ந்தவர் மறைவதும் உலக வியற்கை. மனைவியைப் பிரிந்தவரும், மக்களைப் பிரிந்தவரும், செல்வத்தைப் பிரிந்தவரும், செங்கோலைப் பிரிந்தவருமாக எண்ணில் அடங்காத எத்தனையோ பெயர் இவ்விருநிலத்தை விட்டு மறைந்திருக்கிறார்கள். இருப்பவர்களைக் காட்டிலும் இறந்தவர்கள் தொகையில் அதிகம். எல்லாரு மிருக்க இவ்வுலகத்தில் இடம் கிடையாது. ஏனென்றால், உயிர்களைப்போல உலகம் பெருகுவதில்லை. அஃது என்றும் ஒரே தன்மையில் இருந்து வருகின்றது. அகில காரணராகிய கடவுள் உயிர்களை மிஞ்சவிடாமல் அவ்வப்பொழுது அளவறிந்து சமன் செய்து வருகிறார். அந்த அளவுக்குமேல் ஒருயிராவது உலகத்தில் உலாவ முடியாது. இத்தனை அவகேடான நிலைமையிலிருக்கும் பொழுதுதான் உலகத்தைச் சிலர் தலைகீழாக்கக் கருதுகின்றார்கள். இறந்த காலத்தில் எத்தனையோ சக்ரவர்த்திகள் இந்தப் பரந்த வுலகத்தைத் 'தமது தம' தென்று முறைமை பாராட்டி மடிந்துபோனார்கள். நிகழ்காலத்திற் பலர் பாராட்டிக்கொண்டு மகிழ்ந்து வருகிறார்கள். எதிர்காலத்தில் அங்ஙனம் பாராட்டப் பலர் இருந்து வருகிறார்கள். உலகம் உயிர்களுக்கு ஒரு சிறிதும் சொந்தமாவதில்லை. அது கடவுள் ஒருவருக்குத்தான் சொந்தம். அது மனிதரின் அறியாமையைக் கண்டு அகத்தில் சிரிக்கின்றது. அதற்கு நாம் என்ன செய்யலாம்.

தரணிஸிங்கு மன்னவன் பிணியாற் பீடிக்கப்பட்டு வருஷத்துக்கும் அதிகமாகப் பாயும் படுக்கையுமானான். ஔஷதங்கள் அவனளவில் அற்பமும் பயன் செய்யவில்லை. எப்படிப் பயன் செய்யும்? ஆயுள் அதிகமாக விருந்தால், மருந்து நோயைக் குறைக்கும். ஆயுளை வளர்க்க அதற்குச் சக்தியேது? முடிவில், அம்மன்னவன் ஒருநாள் தன்பிரிவுக்கு அனைவரை

யும் கண்ணீர்விட்டுக் கதறிப் புலம்பவிட்டு விண்ணவர்க்கு விருந்தினனாக விரைந்து சென்றுவிட்டான். பட்டமகிஷி ரமாபாய் கணவனைப்பிரிந்து காசினியில் வதியக் கருத்துக்கொள்ளவில்லை. தனது அருமை மகனும் மருமகளும் அரண்மனையில் இருந்து அநுக்கிரகிக்க வேண்டுமென்று அடியைப் பற்றிக்கொண்டு அழுது புலம்பியும்கூட அவள் மனம் இளகவில்லை. கணவனுடன் சககமனம் செய்வது குலப்பெண்களுக்குச் சிறந்த தருமமென்பது அவள் சித்தாந்தம்.

> "காதலன் இறப்பின், கனையெரி பொத்தி
> ஊதுலைக் குருகின் உயிர்த்து அகத் தடங்காது
> இன்னுயிரீவர்; ஈயா ராயின்,
> நன்னீர்ப் பொய்கையின் நளியெரி புகுவர்;
> நளியெரி புகாஅ ராயின், அன்பரோடு
> உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர்;
> பத்தினிப் பெண்டிர்." சீத்தலைச்சாத்தனுர்.

ஜயஸிங்குக்கும் அவன் மனைவிக்கும் அவள் நற்புத்தி புகன்று உடன்கட்டை யேறினாள். இஃது இந்தியாவுக்குத் தொன்று தொட்ட வழக்கம். பதிவிரதைகளுக்குத் தாமரைப் பொய்கையினும் பெரு நெருப்புத் தண்மைச் செய்யும் போலும்; இறந்தவர் பொருட்டுச் செய்யப்படும் சரமச்சடங்குகள் சிறிதும் பிசகின்றிச் சரியாக நடந்தேறின. ஜயஸிங்கு தன்னைப் பிரிந்து சென்ற தாய் தந்தைகளின் பொருட்டு அத்திங்கள் முழுவதும் துக்கம் கொண்டாடினான். 'ஆண்டாண்டுதோறு மழுது புரண்டாலும் மாண்டார் வருவாரோ?' அறிவிலும் அநுபவத்திலு முதிர்ந்த அறிஞரும் அமைச்சர்களும் அவனுக்குப் பலவிதமான நியாயங்களையும், உலக வழக்கங்களையும் சொல்லித், துக்கத்தை யாற்றினார்கள். உலக வியற்கையை ஊன்றிப் பார்ப்பவனுக்கு நாட்கள் செல்லச் செல்லத் துக்கம் குறைந்து மறையும். அங்ஙனமாகாவிட்டால், உயிர்கள் வளர்ச்சி யடையமுடியா.



# அதிகாரம் 11

## ஜயஸிங்கின் ஆளுகை

"நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
அதனால்,
யான் உயி ரென்பது அறிகை;—
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே." புறநானூறு.

ஜயஸிங்கு குடிகள் வேண்டுகோளின் மீது நல்ல முகூர்த்தமொன்றில் செஞ்சிப் பட்டணத்திற் சிங்காசனம் ஏறினான். அப்பொழுது அவனுக்கு வயது இருபத்திரண்டு. குடிகள் யாவரும் அவன் மகுடாபிஷேகத்தை மிகவும் ஆடம்பரப் படுத்தினார்கள். ஆண்டில் இளைஞனாயினும், அறிவில் முதியனாக விருந்தபடியினால் ராஜா ஜயஸிங்கு தனது ஆளுகையைத் திறமையும் ஒழுங்குமாக நடத்தத் தொடங்கினான். அவன் அற்ப விஷயமாயினும் அமைச்சர்களுடன் ஆலோசனை பண்ணாமற் செய்வதில்லை. சில மாதங்களுக் குள்ளாகவே நீதிபரிபாலனத்தில் அவன் நிகரற்றவனென்று பெயர் பெற்று விட்டான்.

தாயொக்கும் அன்பில், தவமொக்கும் நலம் பயப்பின்,
சேயொக்கும் முன்னின்று ஒருசெல்கதி யுய்க்கும் நீரால்,
நோயொக்குமென்னில் மருந்தொக்கும், நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால், அறிவொக்கும் எவர்க்கும் அன்னான். கம்பர்.

குடிகள் அவனிடம் சென்று தங்கள் குறைகளைச் சொல்லிக்கொள்வதற்குச் சமயம் வேண்டியதில்லை. எப்பொழுது வேண்டுமானாலும் தாராளமாகச் சென்று தெரிவித்துக் கொள்ளலாம். அவன் தனது இளம் பருவம் தொடங்கிச் சூரர் சிகாமணியாகச் சிறந்திருந்த படியினால் தொண்டை

நாட்டுச் சிற்றரசர்கள் அவனிடத்தில் அச்சம் கொண்டு அடங்கியிருந்தார்கள். இராஜாங்க வுத்தியோகஸ்தர்கள் குடிகளிடத்தில் ஆதரவு காட்டி அவர்கள் குறைகளை நீக்க மறந்துபோகவில்லை. குற்றஞ் செய்தவர்களுக்குக் கடுந்தண்டனை கிடைத்துவந்தபடியினால், கொலை களவு முதலான கொடுந் தொழில்களை அவன் ஆளுகையிற் கனவிலும் காண முடியாது. துஷ்ட விலங்குகள் வந்து உயிர்களையும் பயிர்களையும் உபத்திரவிக்காவண்ணம் அவனும் அவன் அதிகாரிகளும் அவ்வப்பொழுது காட்டுக்குச்சென்று வேட்டையாடி அவற்றின் பயத்தை அடியோடு அடக்கி வந்தார்கள். அவனாளுகையில் பயிர்த்தொழிலும் கைத்தொழிலும் பிரபலமாகப் பெருகித் தழைத்தன. அவன் தனது படைகளை முன்னையினும் பெருக்கி யமைப்பதில் முயற்சி கொண்டிருந்தான். மொத்த வருமானத்தின் மூன்றிலொரு பங்கை அவன் இராணுவத்திற்குச் செலவு செய்தான். இராணுவத்தில் புதிதாக வந்துசேரும் ஒவ்வொருவன் திறமையையும் நேரிற் கண்டறிந்து அவன் குலம், குடி, பெயர் முதலியவற்றைத் தனது குறிப்புப் புத்தகத்தில் தானே குறித்துக்கொண்டு வருவான். ஒவ்வொரு வீரனுடனும் அவன் வாரத்தில் ஒரு தடவையாவது சம்பாஷியாதிரான். மாதத்தில் ஒருநாள் வீரர்களுக்கு விளையாட்டுக்களையும் பந்தயங்களையுமேற்படுத்தி, வென்றவர்களுக்கு வெகுமதியளிப்பான். இந்தக் காரணங்களால் அவன் படைப்பலம் மிகவும் பெருகித் தழைத்தது.

காலையிலும் மாலையிலும் அவன் நீதி பரிபாலனம் இராஜகிரியின் அடிவாரத்திலுள்ள கொலுக்கூடத்தில் நடக்கும். இராணுவ சம்பந்தமான விஷயங்கள் இரத்தினகிரியில் நடக்கும். பீரங்கி முதலான பலவகைச் சேம வாயுதங்களும் அவ்விடத்திலேயே அமைந்திருந்தன. கிருஷ்ணகிரியின் சபையில்

அவன் பண்டிதர்களைப் பெருக்கிச் சாஸ்திர வாராய்ச்சி செய்வான். மகம்மதுகான் தலைமைச் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டான். இன்னும் ஜயஸிங்கு வருஷத்திற்கொருதடவை செஞ்சிப் பட்டணத்தில் பெரிய தர்ப்பார் நடத்துவான். அதற்கு அவன் ஆளுகையிலுள்ள எல்லாப் பெரிய மனிதர்களும் வந்திருந்து நடவடிக்கைகளைக் கவனித்து வருவது வழக்கம். ஜயஸிங்கு மூன்றுநாள் வரையில் அவர்களுடனிருந்து நாட்டின் தேவைகளை நன்றாகவிவாதித்து முடிவுசெய்து கொள்ளுவான். இங்ஙனம் ஜயஸிங்கின் அரசாட்சி பிறர் அணுவளவும் குறைகூற முடியாதபடி அருமையும் பெருமையுமாக வலிமை யமைந்து விளங்கிற்று.



## அதிகாரம் 12



### ஆறுகாட்டுத்தர்ப்பார்

"இன்று கொளற்பால நாளை கொளப்பொருன்;
நின்று குறையிரப்ப நேர்படான்;—சென்றொருவன்
ஆவன கூறின், எயிறலைப்பான்; ஆறலைக்கும்
வேடலன். வேந்தும் அலன்."

**குமரகுருபரர்.**

டில்லிப் பட்டணத்திலிருந்து ஆறுகாட்டுக்குப் பிரதிநிதியாக வந்த ஸைதுல்லாகான் பேராசை கொண்டவன். தந்திரத்திற் சிறந்தவன். சுவய காரியத்திற் றேர்ந்தவன். மித்திரபேதத்தில் மிகுந்தவன்.

பேராசைக்கடிமையானவர்கள் உலகத்தையும் தங்களையும் நித்தியமென்று நினைப்பது வழக்கம். உலகமும் உலகப் பொருள்களும் தங்கள் பொருட்டாகவே அமைந்திருக்கின்றன வென்பதும், தாங்கள்தாம் உலகத்தில் சுவதந்திரம்

பாராட்டத் தகுதியுள்ளவர்களென்பதும், தங்கள் சுகத்தின் பொருட்டு உலகத்தை இஷ்டம் வந்தபடி திருப்பி யமைத்துக்கொள்ளலாமென்பதும் அவர்கள் தீர்மானம். இரவு பகல் எந்த நேரத்திலும் அவர்கள் கண்களுக்குத் தங்கள் சுகம் ஒன்றுமாத்திரம்தான் தென்பட்டுக்கொண் டிருக்கும். அந்தச் சுகத்தைப் பெருக்கியும் புதுக்கியும் திருத்தி யமைத்துக் கொள்வதில் அவர்கள் மிகவும் சதுரர்களாக விளங்கி வருவார்கள். வேதம், நீதி, வழக்கம் முதலிய வெவையும் அவர்களைக் கட்டுப்படுத்த மாட்டா. தங்களுக்கு அவசியமானவரையில் அவற்றிலிருந்து சிறிது சிறிது எடுத்துக்கொண்டு, உருத்திராக்ஷப் பூனைபோலத் தங்கள் செயலை முற்றிலும் மறைத்து உலகத்தை மயக்குவதில் மகா நிபுணர்களா யிருப்பார்கள். அவர்கள் கடவுளென்ற பெயரைக்கூடக் கனவிலும் கருத மாட்டார்கள். அவர்களளவில் கடவுளும் தமது * கடவுட் டிருநாமத்தின் காரணப்பொருளையே காட்டிக்கொண்டிருப்பார். கண்டது காட்சி. பெற்றது பேறு. இதுதான் அவர்கள் சித்தாந்தம். இரையை விரும்பி எப்பொழுதும் வட்டமிட்டுத் திரியும் இராஜாளிப் பறவைக்கும் அவர்களுக்கும் சற்றும் பேதம் சொல்ல முடியாது.

ஸைதுல்லாகான் காலத்தில் தொண்டைநாடு பல சிறு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. அப்பிரிவுகளுக்குப் பாளையப் பட்டுக்களென்று பெயர். ஒவ்வொரு பாளையப் பட்டுக்கும் ஒவ்வொரு சிற்றரசன் இருந்துவருவான். இராணுவபலம் பொதுவாக எல்லாருக்கும் உண்டு. எல்லாச் சிற்றரசர்களும் பஹதுஷாவின் பிரதிநிதி யென்று ஆறுகாட்டு நவாப்புக்களுக்கு அடங்கி வருவார்கள். அந்த நவாப்புக்கள் பழைய

* கடவுள்-கடந்தவர். அவர்களைக் கவனியாமற் கடந்தவரென்பது பொருள்.

வழக்கங்களை யநுசரித்தும், பாளையப்பட்டுக்களின் செல்வ விருத்தியைக் கவனித்தும் வரிவிதிப்பது வழக்கம். ஆனால், அந்த வரிப்பணம் எழுத்தின் வடிவமாக மாத்திரம் ஏட்டில் விளங்குமே யன்றி, வருஷப் பிரதி வருஷமும் வசூலிக்கப்படுவதில்லை. சிலரிடத்தில் ஐந்தாறு வருஷ வரிகளும், சிலரிடத்தில் எழெட்டு வருஷ வரிகளும், இன்னுஞ் சிலரிடத்திற் பத்துப் பன்னிரண்டு வருஷ வரிகளும் பாக்கியாகவே யிருந்து வரும்.

எதிர்க்கச் சக்தியற்றவர்களும், பக்கத் துணையில்லாதவர்களுமே மாத்திரம் தவணைப்படி செலுத்திவிடவேண்டும். சில எளிய பாளையப் பட்டுக்களி லிருந்து ஆறுமாதத்துக் கொருதடவையும் வரி வசூலிக்கப்படுவதுண்டு. பாளையப்பட்டு அதிகாரிகளின் சுறுசுறுப்பு முழுவதும் குடிகளிடத்திற் குரூரமாய்ச் சஞ்சரிக்கும். ஆள் இல்லா விடங்களிலும், அடங்கினவர்மேல் அதிகாரம் செலுத்து மிடங்களிலும் அவர்கள் யாவரும் வெண்கல மணிகள்தாம். நவாப்பின் அதிகாரிகளைக் கண்டால், அடுப்பங்கரைப் பூனையாவார்கள். அந்தக்காலத்திற் பொதுவாக நாட்டில் அமைதி நிலைத்திருப்பதில்லை. கழுகும் பருந்தும் ககனமண்டலத்தில் வட்டமிட்டுத் திரிவதுபோல, இராணுவத் திமிர்கொண்ட சில வரசர்கள் எளிய பாளையப்பட்டுக்களை யெதிர்த்தும், அவர்கள் ஆளுகையை அலங்கோலமாக்கியும் அகப்பட்டவற்றைச் சூறையாடி வந்து தங்கள் பொக்கிஷங்களை நிரப்பிக்கொண் டிருப்பார்கள். பேராசைதான் அவர்களது மூற்றுகைக்குக் காரணம்.

ஸைதுல்லாகான் மிகவும் சதுரனென்று சொல்லி யிருக்கிறோம். பாளையப்பட்டுக்களில் நடக்கும் அந்தரங்கச் செய்திகளை அவன் அன்றாடம் அறிந்து கொண்டு விடுவான். யஜமானன் விருப்பம் தீயதாயினும் அதற்கிணங்கி நடப்பவர்க

ளும், யஜமானனுக்குத் தீங்கிழைப்பவர்களும் எந்நாளும் இருந்து வருகின்றன ரல்லவா? பாளையப்பட்டு உத்தியோகஸ் தர்களிற் சிலர் ஸைதுல்லாகானது தயை பெறுவதற்கு ஒன் றைப் பத்தாகக் கூட்டியும், பத்தை நூறுகப் பெருக்கியும் அவனுக்கு அறிவித்து வருவார்கள். கைக்கூலி கொடுத்தும், வெகுமதி யளித்தும், இன்சொல் மொழிந்தும் அவன் அந்த உத்தியோகஸ்தர்களை வசப்படுத்திக் கொள்ளுவான். இன்னும் தன்னின் உயர்ந்தவர்களிடத்தில் ஒற்றுமைப்பட்டவன்போல நடிப்பான். சரியானவர்களிற் சிலரைப் பொருளில் வசப்படுத் துவான். சிலரை இன்சொல்லில் ஏமாற்றுவான். சிலரைப் பேதப்படுத்தித் தாழ்த்துவான். எளியவர்மீது கொஞ்சமும் இரக்கமில்லாமல் தனது படைப்பலத்தைக் காட்டிப் பயப்ப டச் செய்வான். இங்ஙனம் அவன் பெரும்பாலும் எல்லாப் பாளையப்பட்டுக்களையும் மிஞ்சவிடாம லடக்கி அதிகாரம் செலுத்தி வந்தான்.

அவன் பாளையப்பட்டுக்களில் செஞ்சிப்பட்டணமும் ஒன்று. அதிலிருந்து ஒருவிதமான செய்தியும் தெரிவதில்லை. அவ்விஷயத்தில் அவன் உபாயங்கள் பயன் பெறுவது மில்லை. ஜயஸிங்குக்குக் கீர்த்தி வளர வளர ஸைதுல்லாகா னுக்குப் பொறுமை வளரத்தொடங்கிற்று. அவன் புகழைக் கேட்பது அவனுக்குப் பருத்த தலைவலியாயிற்று. பொறு மைக்குப் அறியாமையை யன்றி வேறுகாரணம் வேண்டா மல்லவா? அவன் போலிக் காரணங்கள் பின்வருவனவாம்.

ராஜா ஜயஸிங்கு இராணுவ பலத்தைப் பெருக்கித் தன்னினும் மிஞ்சியிருப்பது ஒன்று. அவன் டில்லிக்குச் சென்று குதிரையை நடத்தினது மற்றொன்று. ஷா ஆலம் அணைவருக்கும் முன்னிலையில் 'ராஜா ஜயஸிங்கு' என்று அவ னுக்குப் பட்டம் கொடுத்தது வேறொன்று. அவன் நலை

மைச் சேனாதிபதி பீமஸிங்கின் செல்வக் குமாரியை மணந்தது பிறிதொன்று. அனைவரும் கண்டு ஆச்சரியப்படும் வண்ணம் ஆளுகை செய்வது பின்னுமொன்று. எல்லாப் பாளையப் பட்டுக்களிலும் அவன் புகழ் அதிகமாகப் பரவுவது இன்னுமொன்று. ஒன்று ஒன்றாக எத்தனையோ வொன்று ஆயிற்று. ஸைதுல்லாகானுக்கு ஒரு வொன்றே அதிகம்.

ஜயஸிங்கை நினைக்குந்தோறும் அவன் உள்ளத்திற் கோபம் வளர்ந்து பெருகும். இல்லாவிடத்துப் பசியும் செல்லாவிடத்துச் சினமும் இருந்து செய்வதென்ன? ஒருகால், ஆறுகாட்டின் மீது ஜயஸிங்கு தனது படைப்பலத்தைப் பிரயோகிப்பானோவென்று ஸைதுல்லாகான் இரவும் பகலும் எண்ணி வருந்தத் தொடங்கினான். 'நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்.' இப்படி யெத்தனை நாளைக்குவருத்தப் பட முடியும்? தந்திரசாலி யாதலால், அதனை நீக்கிக் கொள்ளும்பொருட்டு உபாயமொன்றை உண்டு பண்ணினான்.

டில்லிப்பட்டணத்தில் பரக்ஸியர் பஹதுஷாவாக வந்த நன்னாளைக் கொண்டாடுவதன் காரணமாக எல்லாப் பாளையப் பட்டு மன்னவர்களையும் ஆறுகாட்டுக் கழைப்பித்து மிகவும் பெரிய தர்ப்பார் நடத்தினான். அந்தச் சபையில் விருந்தினருக்கு உபசாரம் சொல்லும் பாவனையாக அவன் பின்வருவனவற்றைச் சொல்லலானான்.

"அரசர்களே! நீங்களனைவரும் இங்கு வந்து கூடி என்னைக் கனப்படுத்தினீர்கள். ஷா இன்ஷா நீண்ட ஆயுளும் ஆரோக்கியமும் பெற்று உலகத்தைப் பரிபாலிக்கும் வண்ணம் கடவுள் கருணை செய்வாராக." என்றான்.

எல்லாரும் "அங்ஙனமே ஆகுக: அங்ஙனமேயாகுக" என்று பதில் கூறினார்கள்.

ஸைதுல்லாகான் "இந்த மகா சபையின்முன்னர் உங்களுக்கு இராஜாங்க சம்பந்தமாக இரண்டொரு விஷயங்கள் சொல்ல விரும்புகிறேன். இதுவரையில் ஆளுகை விஷயத்தில் நமக்குள் உனது எனதென்ற வித்தியாசம் ஏற்படவில்லை; இனியும் ஏற்படாதென்றுதான் நினைக்கிறேன்; நமது ஆளுகையில் அன்றி அதிகாரத்தில் வேறொருவன் தலையிடுதலையும், அதனைத் தனதாக்க முயற்சித்தலையும் செய்வானேல், அந்த அதிக்கிரமத்தைக்கண்டு நாம் பொறுத்திருக்கமாட்டோம்; உங்களுக்குத் தெரியாத வொன்றை நான் புதிதாகச் சொல்லவரவில்லை. சக்ரவர்த்தியின் மகுடாபிஷேக தினத்தைக் கொண்டாடுவதன் காரணமாகச் செஞ்சிப்பட்டணத்திலுள்ள ஜயஸிங்கு மன்னவர் தவிர அனைவரும் இங்கு வந்திருக்கிறார்கள். அவரை நீங்கள் கேள்வியுற்றிருக்கலாம். சிலர் கண்டும் இருக்கலாம். அவர் சில வருஷங்களாகத் தமது இராணுவ பலத்தை மிகவும் பெருக்கி வருகின்றனரென்று கேள்வியுறுகிறேன்" என்றான்.

அப்பொழுது ஒருவர் எழுந்து "ஆம்; இங்குள்ள படைகளினும் அவர் படை ஐந்தாறு மடங்கு அதிகமாகவே யிருக்கும்" என்று சொன்னார்.

நவாப்பு "பார்த்தீர்களா? நானும் அப்படித்தான் நினைத்தேன்; அவர் பணத்தைப் பொருள் பண்ணாமற் செலவிட்டுப் படைகளைத் திரட்டுவதற்குப் பலமான ஒருகாரணம் இருக்கவேண்டும்; எனக்குத் தெரிந்தவரையில் தென்னிந்தியாவில் அப்படிப்பட்ட காரணமிருப்பதாகப் புலப்படவில்லை; அவர் சமயம் பார்த்துப் பருந்து கோழிக் குஞ்சைக் காலினால் உராய்ந்து எடுத்துச் செல்வது போல, நம்மி லெவர் மீதிலாயினும் தமது இராணுவபலத்தை உபயோகித்து ஆளுகையை அபகரிக்கலாம்; ஆனால், அந்தப் படையெழுச்சி எப்பொழுது

யாவர் மீது திரும்புமென்று இப்பொழுது நிச்சயிக்க முடியாது; பொதுவாக எவர் மீதிலும் திரும்ப இடமுண்டு. அவரை இரணகளத்தில் தனித்துநின் றெதிர்க்க நம்மில் ஒருவருமில்லை; விதியின்றி யெதிர்ப்பவருக்கு அபஜயமும் அவமானமும்தான் அடையக்கூடிய பலனாகும்; சிலர் அவர் படைவன்மையைக் கண்டு பயப்படுவதாகவும் கேள்வியுறுகிறேன்; அவர் எச்சமயத்தில் வந்து கோட்டையை முற்றுகை யிடுவாரோவென்று இரவும் பகலும் எண்ணி வருந்துவது ஆண்மையாகாது;

"அரசர்களே! என் வார்த்தையைக் கேளுங்கள்! நீங்கள் ஒருமனப்பட்டு உங்கள் படைகளை எனக்குக் கொடுத்து உதவி செய்யுங்கள்; நான் அவரது இராணுவத் திமிரை அரை நிமிஷத்திலடக்கிக் கப்பமும் கட்டச் செய்கிறேன்; எல்லாப் படைகளும் திரண்டால், அவர் படை அதிசீக்கிரத்தில் அழிந்து போய்விடும்; பல துளி பெரு வெள்ளம்; நீங்கள் எனக்குச் செய்யும் இந்த உதவிக்கு உங்கள் பகுதிப்பணங்களுக்கு இன்று வரையில் ரசீது கொடுத்து விடுகிறேன்; அல்லது உங்கள் படை நஷ்டத்தை ஈடு செய்யாமற்போகாது" என்று சொல்லி நிறுத்தினான்.

ஸைதுல்லாகான் தர்ப்பார் கூட்டியதன் நோக்கம் அரசர்களுக்கு அப்பொழுதுதான் வெளியாயிற்று. சுயநலப்புலிகள் எந்தக் காலத்திலும் இருந்து வருகிறார்கள். வயிற்றை நிரப்புவது அவர்கள் நோக்கமே யல்லாமல் நிரப்பும் பொருட்டுச் செய்யும் தொழிலும், அதன் விளைச்சலும் அவர்களுக்கு நோக்கமன்று. இந்தியா இந்த நிலைமைக்கு வந்ததற்கும் அதுதான் முதற்காரணம்.

அவர்களிற் சிலர் புதிய நவாப்பு தங்களிடத்தில் அவ்வளவு நேசம் காட்டிப் பேசினது நற்காலமென்றும், பொது

நன்மையின் பொருட்டாகவே அவன் பேசியிருக்கிறானென்றும் நம்பி விட்டார்கள். சிலர் "நமக்கென்ன போயிற்று? நாம் ஐந்தாறு வருஷங்களுக்கும் அதிகமாகவே பகுதியனுப்பவில்லை; இவன் அவ்வளவும் சேர்ந்து விட்டதென்று ரசீது கொடுத்து விடுகிறான்; யுத்தத்தின் இலாபநஷ்டம் நவாப்புக்குச் சொந்தம்; வெற்றிகிடைத்தால் நமக்கும் பாகமுண்டு" என்று நினைத்துக் கொண்டார்கள்.

இங்ஙனம் ஒவ்வொருவிதமாகத் தீர்மானித்துக்கொண்டு அவர்களிற் சிலர் அவன் அபிப்பிராயத்தை யங்கீகரித்தனர். சிலர் மாத்திரம் எதிர்த்துப் பேசினர். ஆயினும், அது நிறைவேறவில்லை. அப்புறம் அனைவரும் ஒருமனமாகப் படைகளையனுப்பி உதவி செய்வதென்று கை யெழுத்துச் செய்தார்கள். சபையும் கலைந்தது.

## அதிகாரம் 13

### தூது

ஆறுகாட்டுத் தர்ப்பாருக்குப் பிற்பாடு ஐந்து மாதங்கள் கழிந்தன. ஸைதுல்லாகானுக்குத் திகில் பெரிதாயிற்று. திருடன் பிறரையும் தன்போல மதிப்பதில் ஆச்சரியமில்லை. கரவுடையார் தம்மைக் கரப்பர். 'சும்மாவிருந்த சங்கை ஊதிக்கெடுத்தா'னென்றபடி ஜயஸிங்கு மன்னவனை யெதிர்க்கப் படைகளை யனுப்ப வேண்டுமென்று இவன் தர்ப்பாரில் வெளிப்படையாகச் சொல்லி யிருக்கிறான். அதனைச் சிலர் வெளியில் ஒப்புக்கொண்டது போல வபிநயித்தாலும் உள்ளில் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு சமயம் ஜயஸிங்குக்கு அறிவித்துவிடுவார்களானால்; அவன் அப்பொழுதே வந்து ஆறுகாட்டை

அரை நாழிகையில் அதஞ் செய்து விடுவான். ஆதலின் ஜயஸிங்கு மன்னவன் எதிர் பாராத சமயத்தில் தானே வலுவிற் சென்று அவனை யடக்கவேண்டுமென்பது அவன் அபிப்பிராயம்.

ஸைதுல்லாகான் ஒருநாள் தனது காரியஸ்தரைச் 'செஞ்சிப்பட்டணத்தின் சம்பந்தமான கணக்குக்களைக் கண்டுபிடித்துக் கொண்டு வாருங்கள்' என்று கட்டளையிட்டான். அவர்கள் இரண்டொருநாள் கழித்துவந்து 'எல்லாக்கணக்குக்களையும் பரிசிலனை பண்ணியாயிற்று; இருபத்தெட்டு வருஷங்களுக்கு முன்னர்ச் சூரஸிங்கு மன்னவர் பகுதி செலுத்தியிருக்கிறார்; அவர் புத்திரர் தரணிஸிங்கு மன்னவர் அரசாட்சிக்கு வந்ததும் அது நிறுத்தப்பட்டுப் போயிற்று; தங்களுக்கு முன்னிருந்த இரண்டு நவாப்புக்கள்கூட அவரிடம் பகுதி பெறுவதில்லை; அவ்விஷயமாகக் கடிதமும் அனுப்பிக் கொள்வதில்லை; மற்றவர்களிடம்தான் வசூலித்து வந்திருக்கிறார்கள்' என்று கூறினர்கள். நவாப்பு 'சரி, நீங்கள் செல்லுங்கள்' என்று சொல்லி எல்லாப் பாளையப்பட்டுச் சிற்றரசர்களும் பத்துநாளைக்குள் படைகளைத் திரட்டிக்கொண்டு ஆறுகாட்டுக்கு வந்து சேரவேண்டுமென்று அந்தரங்கத்தில் கட்டளை எழுதியனுப்பினன்.

மறுநாள் தோன்றமல்லனென்ற வொருவீரன் இராஜதூதனுகச் செஞ்சிப் பட்டணத்துக்குப் புறப்பட்டான். தற்காப்பின் பொருட்டு மிகவுஞ்சிறிய படை வகுப்பொன்று அவனைத் தொடர்ந்து போயிற்று. தோன்றமல்லன் மிகவும் சதுரன். இராஜதந்திரம் தெரிந்தவன். ஆராய்ச்சி யறிவில் மிகுந்தவன். கல்வியைக் கற்றவன். அஞ்சாமை கொண்டவன். அளவறிந்து பேசுபவன். சொல்வன்மை நிறைந்தவன். இவற்றுடன் பல நவாப்புக்களின் சபையிலுமிருந்து நற்பெயர் பெற்றவன்.

அவன் முதல் நாள் ஆரணிக் கோட்டையில் இருந்த வேங்கடராயரென்பவருக்கு விருந்தினனாகி மறுநாள் சேற்றுப்பட்டை யடைந்தான்.

அந்தச் சிறுநகர் செஞ்சிப் பட்டணத்தைச் சேர்ந்தது. அதில் அரசன் கட்டளை பெற்ற அதிகாரி யொருவனிருந்து அமைதி யுண்டுபண்ணல், வரி வசூலித்தல், வழக்குத் தீர்த்தல் முதலிய அரசகாரியங்களைக் கவனித்துக் கொண்டு வருவான். தோன்றமல்லன் அவனைக்கண்டு 'ஐயா! நான் இராஜ தூதன்; ஆறுகாட்டிலிருந்து வருகிறேன்; ராஜா ஜயஸிங்கு அவர்களைக் காணவேண்டும்'என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டுபோனான்.

பழைய காலங்களில் இராஜ தூதர்கள் வெறுங்கையோடு சென்று வேற்று மன்னவர்களைக் காணமாட்டார்கள். கவுரவமான சிலகாணிக்கைகளைக் கையிற்கொண்டு தான்செல்வதுவழக்கம். தோன்றமல்லன் தன்னை ஆடைகளாலும் ஆபரணங்களாலும் செம்மையாக அலங்கரித்துக் கொண்டு சபா மண்டபத்துக்குச் சென்று அரசனைக் கண்டு வணங்கி நின்றான். ஜயஸிங்கு மன்னவன் அவனை அருகிலுட்காரச் செய்து அவன் பெயரையும் வந்த காரியத்தையும் வினவினான்.

தோன்றமல்லன் "மகாராஜாவே! நான் ஆறுகாட்டிலிருந்து இராஜ தூதனாக வந்திருக்கிறேன்; என்னாற் சொல்லப்படுவன யாவும் நவாப்பு ஸைதுல்லாகான் வசனமென்று கொள்ளவேண்டும்" என்று சொன்னான்.

ஜயஸிங்கு மன்னவன் "என்ன! ஸைதுல்லாகான்! ஆறுகாட்டு நவாப்பு! அவருக்கும் இந்த இராஜ்ஜியத்துக்கும்

என்ன சம்பந்தமிருக்கின்றது? நல்லது; சங்கதியைச் சொல்லும்" என்முன்.

தோன்றமல்லன் "இப்பொழுது இந்தியாவுக்குப் பரக்ஷியர் சக்ரவர்த்தி. எல்லாப் பெரிய வரசர்களும் அவருக்குக் கப்பம் கட்டிக்கொண்டு வருகிறார்கள்; ஷா இன்ஷா தென்னிந்தியாவுக்கு ஸைதுல்லாகான் என்பவரைத் தமது பிரதிநிதியாக ஆறுகாட்டில் இருந்து அமைதியையும் நீதியையும் நிலை நிறுத்தும்படி கட்டளை கொடுத்து அனுப்பியிருப்பதனால் அவர் சில மாதங்களாக ஆறுகாட்டுக்குவந்து அதிகாரம் செலுத்தி வருகிறார்.

"ஷா ஆலம் காலத்தில் தாங்கள் டில்லிப் பட்டணத்தில் தெய்வக் குதிரையை யடக்கிப், பஹதுஷா அவர்களால் 'ராஜாஜயஸிங்கு' என்ற பட்டத்தையும் மரியாதைகளையுமடைந்து படைத்தலைவரான பீமஸிங்கு மன்னவர் புத்திரியைத் திருமணஞ் செய்து கொண்டு திரும்பி வந்திருக்கிறீர்கள்; தங்கள் திருமணக் காலத்தில் செஞ்சியின் அரசாட்சியைத் தங்களுக்கு இனும் பண்ணியிருக்கிறேமென்று ஷா இன்ஷா சபையில் சொல்லியிருப்பதாக ஒரு வதந்தி யுலாவுகின்றது; அதன் பொருட்டுத் தமக்கு ஏதாவது கட்டளை கிடைக்குமென்று இவருக்கு முன்னிருந்த நவாப்பு எதிர் பார்த்திருந்தார்;ஒருவிதமான தகவலும் கிடைக்கவில்லை;இவர் நவாப்பாக வந்தபிற்பாடு இரண்டொரு சமயங்களில் தங்களை நேரில் விசாரித்துத் தெரியலாமென்றும் எண்ணினார்; அப்புறம் அஃது ஒழுங்கல்லவென்று டில்லிப் பட்டணத்துக்குத் தெரிவித்துக் கொண்டார்;

"அதற்குச் * 'செஞ்சியின் அரசாட்சியைராஜா ஜயஸிங்கு மன்னவருக்கு இனும் செய்து தரவில்லை; ஷா ஆலம் சக்ர

* இது ஸைதுல்லாகான் கற்பிதம்.

வர்த்தி காலத்தில் அவருக்குப் பட்டமும் மரியாதைகளும் வழங்கப்பட்டன; பழைய வழக்கம் போலவே அவரிடமும் பகுதி வசூலிக்க வேண்டியது' என்று அங்கிருந்து கட்டளை கிடைத்திருக்கின்றது; தென்னிந்தியாவின் சிற்றரசர் பலரும் சரியான காலத்திலேயே திறைகளைச் செலுத்தி வருகிறார்கள்; நாட்டில் நீதியும் அமைதியும் நிலைத்து விளங்குகின்றன; தாங்களும் திறை செலுத்தி அவ்விரண்டையும் நிலைக்கச் செய்ய வேண்டுமென்று தங்களுக்கு ஸைதுல்லாகான் நினைப்பூட்டு கிறார்" என்று சொன்னான்.

ஜயஸிங்கு புன்சிரிப்போடு "சதுரரே! உங்கள் தூது மிகவும் விநோதம்; உங்கள் அரசர் நவாப்புப் பதவிக்கு வந்து ஒரு வருஷமாகின்றது; ஷா ஆலம் சக்ரவர்த்தியின் காலம் தொடங்கியே இங்கிருந்து திறை வசூலிக்கப் படுவதில்லை; என் தந்தை இருபத்தைந்து வருஷம் சிங்காசனத்தில் இருந்திருக்கிறார்; நான் வந்தும் இரண்டு வருஷத்துக்குமேல் ஆகின்றது; பழைய வழக்கத்தை யொழிக்கவாவது, அன்றிப் புதிய வழக்கத்தை யுண்டு பண்ணவாவது முடியாது; பிறர் என்னாட்டின் ஆளுகை விஷயத்திற் குறுக்கிடுவதற்குக் கொஞ்சமும் இடம் தரேன்; அங்ஙனமே எனக்குச் சம்பந்தமில்லாத பிறர் விஷயங்களிலும் நான் தலையிடேன்; உங்கள் நவாப்பு புதியவர்; பழக்க வழக்கங்களையும், நடந்து கொள்ள வேண்டிய ஒழுங்குகளையும் அநுபவமுதிர்ந்த மந்திரிகளைக் கேட்டுத் தெரிந்துகொள்ளச் சொல்லுங்கள்; புதியவற்றை உண்டு பண்ணவும், பழையவற்றை விடவும் வேண்டியதில்லை" என்று சொன்னான்.

தோன்றமல்லன்:—அவர், தாம் புதியவரென்பதை மறுக்கவரவில்லை; எல்லா வரசர்களையும் போலவே தாங்களும் நடந்துகொள்ள வேண்டுமென்றுதான் தெரிவிக்கிறார்.

**ஜயஸிங்கு:**—தூதரே! என்நாட்டு அரசியலைக் கண்காணிக்கவும், கட்டளையிடவும் உங்களரசர் யஜமானரல்லர்; இப்படிப்பட்ட வசனங்களை என்முன் பேசவும் இடம் தரமாட்டேன்.

**தோன்றமல்லன்:**—பஹதுஷா அவர்களின் பிரதிநிதியாகத்தானே அவர் பேசுகிறார்.

**ஜயஸிங்கு:**—செஞ்சியின் அரசியல் விஷயமாக அவருக்குப் பேச அதிகாரமில்லை; ஆறுகாட்டுக்கும் செஞ்சிக்கும் இராஜாங்க சம்பந்தமான போக்கு வரவு நின்று முன்பின்னாக முப்பது வருஷமாகின்றது.

**தோன்றமல்லன்:**—பழைய இராஜாங்க சூழ்ல்களைத் திருத்தி யமைப்பது பிரதிநிதியின் கடமையல்லவா? அவர் அனைவரும் ஒற்றுமையாக இருக்கவேண்டுமென்றுதானே விரும்புகிறார்; ஒற்றுமையிலுள்ள நயம் வேற்றுமையில் வெளியாகாதே.

**ஜயஸிங்கு:**—தூதரே! அடக்கமற்ற வசனம்; அவர் நயத்தையாவது, அன்றிப் பயத்தையாவது நான் பொருள் பண்ணவில்லை; இஷ்டம் வந்தபடி அவர் நடந்து கொள்ளட்டும்; விடை பெற்றுக்கொள்ளுங்கள்!

**தோன்றமல்லன்:**—தங்கள் சித்தம்; முரண்படுவதனாலுண்டாகும் கஷ்ட நஷ்டங்கள்—

**ஜயஸிங்கு:**—என்ன சொன்னீர்? கஷ்டம், நஷ்டம்; தூதரே! உங்கள் ஆறுகாட்டு ஆலோசனைச் சபையை நான் அறியாதிருக்கவில்லை; செல்லுங்கள்" என்று கடுமையும் அழுத்தமுமாகச் சொன்னான்.

தோன்றமல்லன் அதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை. அவன் 'தங்கள் சித்தம்; விடை கொள்கிறேன்' என்று வணங்கித் திரும்பி விட்டான்.



# அதிகாரம் 14

## போது

"ஆடகச் செம்பொன் வள்ளத்து எந்திய அலங்கல் தெண்ணீர்
கூடகம் கொண்ட வாழ்நாள் உலந்தகேற் கொல்லும்; பவ்வத்து
ஊடகம் புக்கு முந்நீர் அழுந்தினும் உய்வர்; நல்லார்
பாட்கம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தின் என்றான்."

திருத்தக்கதேவர்.

நல்ல வரசாட்சியினால் நாட்டுக்கு அமைதியுண்டாகும். நீதிப்பயிர் வளர்ந்து பலன்தரும். முயற்சி நிலத்தில் விளையும் பலவகைச் செல்வங்களும் செழிப்படையும். ஜனங்கள் உரிமைகளையும் உடைமைகளையும் நிர்ப்பயமாக வைத்து அநுபவித்துவருவார்கள். களவு கொலை முதலான கொடுஞ் செயல்கள் கொஞ்சமும் நடவா. தானதருமங்களும் தெய்வப்பிரார்த்தனைகளும் மிகும். இராஜ தந்திர நிபுணர்களான வரசரும் அமைச்சரும் தங்கள் விடாமுயற்சியினால் இரவும் பகலுமாக இளைப்பின்றி முயன்று வந்தாலுங்கூட, இவ்வளவும் ஒன்று இரண்டு வருஷங்களில் உண்டாகிவிடமாட்டா. எத்தனையோ வருஷங்கள் செல்லும்.

தற்பொறுப்பினாலும், தன்னல மறுப்பினாலும் பல வருஷங்களாக முயன்று உண்டு பண்ணின இவ்வரிய அமைதி முதலியவை சில சமயங்களில் கொடுங்கோல் முதலான சூறாவளியிற் றாக்குண்டு இருந்தவிடம் தெரியாமல் அழிந்துபோவதுமுண்டு. குயவன் பலநாள் காறும் வருந்திச் செய்த வேலையை ஒரு முரட்டுத் தடிகாரன் ஓரேநாழிகையில் நாசஞ் செய்துவிடலாமல்லவா? குயவன் தொழிற் றிறமையில் தடி

காரனுக்கு ஒரு கூறுவது அமைந்திருக்க வேண்டியதில்லை. அவன் அற்பத்திலும் அற்பமுள்ளவனாக விருக்கலாம். மூர்க்க குணமொன்றுதான் அவனுக்கு முக்கிய விலக்கணம். நாம் இரவிற்படுத்து இளைப்பாறும்பொழுதுண்டாகின்ற இன்பமயமானநித்திரையை, அல்லது இன்பமயமான கனவை, ஒரு சிறிய சத்தமாவது, அன்றி மிகவும் அற்பப் பிராணியான கொசுகாவது இடையிற் புகுந்து நாசம்செய்துவிடுகின்றது. இஃது என்றும் அழிக்க முடியாத கடவுள் கற்பனை. இன்பதுன்பங்கள் திடீரென்று வந்து மனிதர்களை யடைகின்றன. அவை அநுபவிக்கும் சமயத்திலன்றி வெளிப்படுவதுமில்லை.

ராஜா ஜயஸிங்கின் செங்கோல் அற்புதமாக அமைந்திருந்ததென்று படித்திருக்கிறீர்கள். அவனது ஆளுந்திறமும் ஒழுங்கும் குன்றின்மேலிட்ட விளக்குப்போலப் பிறபாளையப்பட்டுக்களிற் புகுந்து பிரசித்தமாயின. பெருந்தன்மையும் மரியாதையும் கொண்ட பல ஜாதிமனிதர்கள் அவனுளுலகையில் வந்து குடிபுகுந் திருந்தார்கள்.

கொல்லும் விஷம் கடுகும் அதிகம். கிள்ளி யெறியும் முளையை முதலில் அலக்ஷ்யம் பண்ணி விட்டால், அது பெருகி வளர்ந்து, அப்புறம் அநேகம் வாட்காரருக்கும் கோடரிக் காரருக்கும் கஷ்டமான வேலையைக் கொடுக்கும். ஜயஸிங்கு அதனைச் சிந்தியாமல் இருக்கவில்லை. அவன் அம்முளைவளர்ந்து பெருகுவதற்கு அதிககாலம் செல்லுமென்று எண்ணி யிருந்தான். அவன் எண்ணத்தின் வண்ணம் அது வளரவில்லை. மிகவும் சீக்கிரமாக வளர்ந்து பெருகிப் போயிற்று.

ஸைதுல்லாகான் பாளையப்பட்டுக்களின் படைப்பெருக்கத்தைக் கண்டு ஜயஸிங்கு மன்னவனை அப்பொழுதே வெற்றி யடைந்து விட்டதாகச் சந்தோஷங் கொண்டு தன்னைப்போலும் தந்திரத்தில் மிகுந்த தாவுத்கான் என்ற பெயர் பெற்ற வீரனை அந்தப் படைக்குச் சேனாதிபதியாக நியமனஞ் செய்தான். அவ்வீரன் படைகளை அணிவகுத்துப் பார்த்துத் திறமையுடன் நடத்தினால் ஜயம் பெறலாகுமென் றெண்ணினான்.

அத்தருணத்தில் தூதனாகச் சென்றிருந்த தோன்றமல்லனும் திரும்பி வந்து சேர்ந்தான். அவன் இராஜ சபையில் ஜயஸிங்கு மன்னவன் திறமையையும், அவன் அஞ்சாமையையும், அவன் படைப் பெருக்கத்தையும், அவன் நாட்டின் அமைதியையும், அவனது நியாயம் தவறாத விடையையும், ஸைதுல்லாகானுக்குத் தெரியப் படுத்தினான். சங்கீத வோசை போன்ற மிகவும் இனிய அந்நீதி மொழிகள் பொறாமைப் பேயும், பேராசைப் பிசாசமும் ஒருமிக்கப் பிடித்து ஆட்டுகின்றவன் செவியில் நுழைந்து பலன்தரப் போகின்றனவா? எப்படியாவது ஜயஸிங்கு மன்னவனைச் சிறை செய்யவேண்டுமென்பது அவன் தீர்க்காலோசனை. தனக்கு வெற்றி கிடைத்தால், பலவிதமான தருமம் செய்வதாகக் கடவுளுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டான்.

ஆம், என்ன செய்யலாம்! நடுக்காட்டில் கொள்ளை கொடுத்தவனுக்கும், கொள்ளையிட்டவனுக்கும் ஒரே கடவுள் தாம் துணை செய்துவருகிறார். மறுபடியும் அவர்தாம் அகப்படவும் பண்ணுகிறார். அக்கிரமம் கிரமம் என்று நம்மால் ஒன்றையும் ஆலோசித்துத் தீர்க்கமுடியாது. நமக்கு அக்கிரமமான வொன்றைக் கடவுள் கிரமமென்று நினைக்கிறார். நாம்

கிரமமென்று கொண்டாடுகின்றவற்றை அவர் அக்கிரமமென்று வெறுத்துத் தள்ளுகிறார். இதற்கு என்ன செய்யலாம்! அவர் எல்லாமறிந்தவர். நாம் ஒன்றும் அறியாதவர். அவர் மனமுவந்து அளித்தவற்றை அநுபவிக்கக் கடமைப்பட்டவர்களே யல்லாமல் ஏன் அளிக்கவில்லையென்று அதிகாரம் பண்ணவாவது, அநுபவியோமென்று மறுக்கவாவது நமக்குச் சுதந்தரம் இல்லை.



# அதிகாரம் 15



## ஆலோசனை

ஸைதுல்லாகான் தோன்றமல்லனை அன்றிரவு தன்னை வந்து காணும்படி சொல்லியனுப்பி யிருந்தான். அவன் வந்து கண்டதும் உட்காரச் செய்து செஞ்சிப்பட்டணத்தைப் பற்றி அவன் அபிப்பிராயத்தை வினவினான்.

தோன்றமல்லன் "தலைவரே! இராஜதூதர்கள் உண்மையுரைக்கக் கடமைப்பட்டவர்கள்; சொல்லும் விஷயம் தங்கள் அரசருக்கு அப்பிரியம் விளைப்பதானாலும், இவர்கள் மாற்றிச் சொல்லலாகாது; ஏனென்றால், அரசாட்சியின் வளர்ச்சி இவர்கள் உண்மையுரையை எதிர்பார்த்து நிற்கின்றது; இவர்கள் பிறநாட்டின் அரசியலைக் கூட்டியும் குறைத்தும் தங்களரசருக்குத் தெரியப்படுத்துவார்களானால், அவ்வரசர்கள் அந்நாட்டின் மீது படையெடுத்துச் சென்று பலவிதமான இன்னல் இடைஞ்சல்களுக் குள்ளாகிப் பெரிய நஷ்டங்களை வருவித்துக் கொள்வார்கள்.

"ஜயஸிங்கு மன்னவரை நம்மால் வெல்ல முடியாதென்பது என் அபிப்பிராயம்; அவர் அரசு, அன்பும் அழுத்தமு

மாக வளர்ந்திருக்கின்றது; அவர் நம்மைக் காட்டிலும் ஒவ்வொன்றிலும் மிஞ்சி விளங்குகிறார்; நம்மால் உபயோகிக்கப் படுகின்ற உபாயம் நான்குக்கும் அவ்வுத்தம வரசாட்சியைத் துளக்கத் திறமை யமையாது; அவரை வெல்ல நினைப்பீர்களானால், முதலிலுள்ள மூன்றுபாயங்களையும் திறமையுடன் உபயோகித்து முதலில் அவர் அரசியலில் அமைதியின்மையை உண்டுபண்ணவேண்டும்; அது நிறைவேறின பிற்பாடுதான் படையெழுச்சி பயன்படும்.

"உபாயம் நான்கிலும் தண்டம் கடைப்பட்டது; பகைவன் நம்மிலும் படைப்பலத்திற் குறைந்து காணப்பட்டாலன்றித் தண்டம் சிறப்படையாது; நாம் திரட்டியிருப்பது கூலிப்படை. அவரிடத்திலுள்ளது சொந்தப்படை; அவர்கள் ஒரு தலைவன் கீழ் ஒழுங்காகப் பயிற்றப்பட்டிருக்கிறார்கள்; நம் படைகளுக்கு அந்தப் பழக்க மமையக் குறைந்தது ஆறு திங்களாவது செல்லும்; இவர்களை அங்குக் கூட்டிக்கொண்டு சென்று அபஜயத்துடன் திரும்பிவருவது ஆண்மை யன்று; அழகன்று; அறிவும் அன்று; அதனால், கஷ்டம் வளரும்; நஷ்டம் பெருகும்; மதிப்பு குறையும்;

"தாங்கள் பரக்வஸியர் பஹதுஷாவுக்கு அந்தரங்கநண்பரென்பதில் ஆக்ஷேபணையில்லை; ஆனாலும், அவரைவிட்டு நெடுந்தூரம் வரையில் இப்பொழுது பிரிந்து வந்திருக்கிறீர்கள்; அங்குள்ள தலைமைச் சேனாதிபதிக்கு ஜயஸிங்கு மன்னவர் மருமகர்; அவர் தங்களைத் தமது மருமகருக்கு அநுகூலரென்று நினையார்; இன்னும், ஜயஸிங்கு மன்னவர் சாதாரண மருமகரல்லர்; அவர் அரசியலின் திறமையையாலோசிக்கு மிடத்தில் அவதார புருஷராகவே விளங்க வேண்டும்; ஏனென்றால், நமது சபையிலும், தாங்கள் கூட்டிய தர்ப்பாரிலும், ஆலோசனை மண்டபத்திலும் நடந்த ஒவ்

வொரு விஷயத்தையும் அவர் அப்படி யப்படியே அறிந்து கொண்டிருக்கிறார்.

"அரசர் தலைவரே! தங்களுக்குப் பிரியமில்லாத விஷயத்தையே இத்தனை நாழிகை பேசியிருக்கிறேன்; அதன் பொருட்டு என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!

"எதிலார் யாதும் புகல, இறைமகன்
கோடொரீஇக் கொள்கை முதுக்குறைவு;—நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார்? தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு."
குமரகுருபரர்.

இனித் தாங்கள்தாம் சரியானபடி ஆலோசித்துத் தீர்மானிக்க வேண்டும்" என்று நிறுத்தினான்.

ஸைதுல்லாகான் "அருமைத் தூதரே! உங்கள் வசனத்தை மறுக்கவில்லை; அவரைப்பற்றிச் சொல்லிய வனைத்தும் உண்மையானதுதான்; செஞ்சியினரசு, வளர்பிறையினும் பெருகுவதும், அதன் தன்மையை யறிந்துகொள்ள என்னாற் சாத்தியமில்லா திருப்பதுமே எனக்கு வருத்தம் தருகின்றன; வலிய வரசனொருவன் நம்மினும் பெருகிச், சமீபத்தில் வளர்ந்து வருகிறானென்பதைக் கேட்க என்னுதிரம் கொதிப்பெடுக்கின்றது; என் மனப்பகைப்பு அவனாற்றலைப் பொருள் பண்ணவில்லை; டில்லியின் படைத்தலைவருக்கும் எனக்கும் அவ்விடத்திலேயே ஒற்றுமை கிடையாது; ஏனென்றால், நான் தென்னிந்தியாவுக்குப் பிரதிநிதியாக வருவதில் அவர் இஷ்டமில்லாதவர்; ஜயஸிங்கு மன்னவரைப் பகைக்கிறேனென்றுதெரிந்தால். எனக்குத் தீங்கிழைக்கும் சமயத்தைச் சமீபத்திலேயே தேடிக்கொண் டிருப்பார்;

"இனி, இவ்விடத்தின் நிலைமையைக் கவனியுங்கள்; செஞ்சிக்கோட்டையை முற்றுகை செய்வதற்கென்று பாளையப் பட்டுக்களிலிருந்து படைகள் திரண்டு வந்திருக்கின்றன;

படையெழுச்சியை நிறுத்தும் நாள் என்றோ பறந்துபோயிற்று; அதனை நிறுத்த வியலாது; நிறுத்தினால், சிற்றரசர்கள் பயந்துபோனானென்று கேலி செய்வார்கள்; அப்புறம் என் கட்டளைக்கு மதிப்புண்டாகாது; முற்றுகையிலுண்டாகின்ற தீது நலம் இரண்டையும் அநுபவிக்க வேண்டியதுதான்; 'மானமழிந்தபின் வாழாமை முன்னினிது' இப்பொழுது வேண்டியிருப்பது சண்டையைத் திறமையுடன் செய்து வெற்றி பெறுதற்கான தந்திரங்களேயாகும். அதற்கேதேனும் உபாயமிருந்தாற் சொல்லுங்கள் !" என்று கூறினான்.

தோன்றமல்லன் முகத்தைச்சுளித்துக்கொண்டு "அண்ணலே ! நான் கண்டதும் கேட்டதும் உண்மையாக விருந்தால், நமக்கு வெற்றி கிடைக்க மாட்டாது; ஆனால், கடவுள் திருவுள்ளத்தை அறியமுடியாது; ஒரு சமயம் தங்கள் பிடிவாதமே அநுகூலத்துக்கும் அறிகுறியாகலாம்; படையெழுச்சியைப் பற்றிச் சொல்கிறேன்; செஞ்சியின் படைத்தலைவனுக்கு மகம்மதுகான் என்று பெயர்; அவன் அரசருக்கு அந்தரங்க நண்பன்; அஸஹாய சூரன்; அவனுக்குத் திருமணம் நிச்சயித்திருக்கின்றது; அம்மணம் வழுதாவூரென்றவிடத்தில் நடக்கும்; மகம்மதுகான் அந்தக் கிராமத்துக்குச் சென்று ஐந்துநாட்களாகின்றன; அவன் திருமணம் நாளை வெள்ளிக்கிழமை; அவன் செஞ்சிக்குத் திரும்பிவரக் குறைந்தது ஒருவாரஞ் செல்லும்; அதற்குள் துரிதப்பட்டுக் கோட்டையை முற்றுகை செய்யுங்கள்; கடவுள் கருணையிருந்தால் ஒரு சமயம் தங்கள் நினைவு நிறைவேறலாம்; 'மீகாமனில்லா மரக்கலம் ஓடாது' ஆனால், முடிவாக அப்படியும் துணிந்து விடுவதற்கில்லை; ஜயஸிங்கு மன்னவர் திறமையுடன் படைகளைநடத்துவார்; அரசர் தலைவரே ! எல்லாவற்றையும் சொல்லிவிட்டேன்; இனித் தங்கள் இஷ்டம்" என்று நிறுத்தினான்.

ஸைதுல்லாகான் "சதுரரே! இது நல்ல சகுனம்; இது போன்ற சகுனம் இனி வாய்க்கவே மாட்டாது; உடனே சென்று முற்றுகை யிட்டால், வெற்றி சொந்தமாகும்; படைகளுக்கு எளிதில் உணவுப் பொருள்கள் கிடைக்கும்வழி யென்ன? அங்கே பருவகாலம் எப்படியிருக்கின்றது? செல்லும்வழியில் உணவு சேகரித்துக் கொள்ளமுடியுமா? நீங்கள் இவற்றை விளங்கச் சொல்லுங்கள்" என்றான்.

தோன்றமல்லன் "அண்ணலே! எல்லாம் சரியாகவே அமைந்திருக்கின்றன; இப்பொழுது பூமி, தட்பமும் வெப்பமுமில்லாமற் சமநிலையாக விருக்கின்றது; நீரும் பயிரும் நிலத்தில் நிறைந்து கண்ணுக்கினிய காட்சியை விளைக்கின்றன; சில நன்செய்ப் பயிர்கள் சூல்கொண்ட பச்சைப் பாம்புபோலக் கருக்கொண்டு விளங்குகின்றன; சில பயிர்கள் அதிகாரத்தையும் பொருட் செல்வத்தையும் பெற்ற பூரியர்போல இளங்கதிர்களைப் பெற்றுத் தலை நிமிர்ந்து நிற்கின்றன; ஒழுக்கமும் கல்வியும் ஒருங்கே யமைந்த வுத்தமர்போல் முற்றின கதிர்களையுடைய சில பயிர்கள் தலைவணங்கி நிற்கின்றன; பொன்மணிகளைப் பரப்பிவைத்தது போல நன்றாய்ப்பழுத்த சில செந்நெற் கதிர்கள் நிலம் தெரியாமல் நிறைந்து படுத்து இளைப்பாறுகின்றன; சில நிலங்களில் நாணற்கரும்பு, இரசதாளிக் கரும்பு, நாமக்கரும்பு, செங்கரும்பு, வெண்கரும்பு முதலிய கரும்பினங்கள் வளர்ந்து தீஞ்சாறு திரண்டு முற்றி யந்திரத்தை எதிர்பார்த்து நிற்கின்றன;

"புன்செய் நிலங்களிற் சிலவற்றில், பொய்யாது பொழிந்த பருவ மழையினல் மிகவும் சிறிய யானைக்கன்றுகள் தங்கள் துதிக்கைகளை ஒன்றோடொன்று பொருத்தி விளையாடுவன போலத் தினைக்கதிர்கள் முற்றி வளைந்துபின்னிப் பிணைந்திருக்கின்றன; சிலவற்றில் அவரையும் மொச்சையும்

அத்திணைத்தாள்களிற் படர்ந்து,திரிந்த தயிரின்பிதிர்ச்சியைப் போலப் பூக்களை யுதிர்த்து, அரிவாளும் புலி நகமும்போன்ற வளைந்த காய்களைக் குலை குலையாகக் கொண்டிருக்கின்றன; சிலவற்றில் விளைந்து சாய்ந்த வரகுகள் வாதிகளின் கைபோல எதிரெதிராக நீண்டு கருமையமைந்த பிளவுக் கதிர்களைப் பெற்றிருக்கின்றன; சிலவற்றில் கருவத்தினாற் றலைவிரித்துத் திரியும் கசடர்போலச் சோளப்பயிர்கள் சிவப்பு, வெளுப்பு, மஞ்சளென்ற முந்நிறம் பொருந்திய மணிக்கதிர்களைப்பெற்று முற்றி நிற்கின்றன;

"கதிர்களைக் கவரவரும் கிளி, குருவி முதலான பறவைகளை யதட்டுவதற்குச் சிறுமிகள் 'ஆயாலோ! ஆயாலோ! வென்று கத்துகின்ற ஆர்ப்பு, வானம் பிளக்க வொலித்துக் கொண்டிருக்கின்றது;வாழைச்சோலை,மாஞ்சோலை, தென்னஞ் சோலை, பலாச்சோலை முதலான பலன்தரும் சோலைகள் வழி முழுவதும் வளர்ந்து செழித்திருக்கின்றன; எருமைகளும் பசுக்களும் வயிறுர மேய்ந்து, மாலைக்காலத்தில் கன்றுகளை நினைந்து மடியிற் சுமக்கமுடியாத பாலை, நிலத்திற் பெருக்கிக் கொண்டு விரைந்து செல்கின்றன; நிருபர் தலைவரே! தங்கள் எண்ணம் நிறைவேறும்படி கடவுள் கருணை செய்யட்டும்! வடக்குக் கோட்டை வெளியில்தான் முற்றுகை செய்யவேண்டும்; சீக்கிரம் புறப்படப்பாருங்கள்" என்று சொன்னான்.

ஸைதுல்லாகான் "சந்தோஷம்; அதிகாலையிலேயே புறப்படவேண்டும்; நீங்கள் பிரயாணத்துக்கு வேண்டியவற்றைப் பாருங்கள்! நான் மற்றவற்றைத்திட்டப்படுத்துகிறேன்"என்று விடைகொடுத் தனுப்பினான்.



## அதிகாரம் 16

### படையெழுச்சி

1714-வது வருஷம் அக்டோபர் மாதத்தில் மிகவும் பெரிய படைத்திரளொன்று ஆறுகாட்டிலிருந்து புறப்பட்டுச் செஞ்சிக்கோட்டையை நோக்கிச்சென்றது. அது மிகவும் ஆச்சரியமாக விளங்கிற்று. அதிற்குதிரைகளும், யானைகளும், ஒட்டகங்களும் அதிகமாகவிருந்தன. பீரங்கி வண்டிகளையும், கூடார வண்டிகளையும் பல கோவேறு கழுதைகள் இழுத்துச் சென்றன. படைவீரர் தங்கள் பராக்கிரமத்தைப் புகழ்ந்தும், பிறரோடு அளவளாவியும் சந்தோஷமாகச் சென்றார்கள். தளகர்த்தர்களும், தலைவர்களும் அரசர்களும் வாகனங்களிலமர்ந்து வரிசை வரிசையாக நடந்தார்கள். அவர்கள் ஆயுதங்கள் மின்னலினும் ஒளிவீசித்துளங்கின. ஆர்ப்புவானத்தின் வயிற்றைப் பிளந்தது. பேரிகை கடலின் ஒலியை அடக்கிற்று. அவர்கள் தங்கள்பயணத்தைத் துரிதமும் களிப்புமாகச் செய்துகொண்டு சேற்றுப்பட்டைக் கடந்து தேவனூரென்ற கிராமத்தைச் சேர்ந்த ஒரு மைதானத்திற் றங்கினார்கள்.

பசி அனைவருக்கும் பொது. வீரர்களாயிருந்தாலும், சூரர்களாயிருந்தாலும் வேளை தப்பாமல் வயிற்றுக்கு உணவு தரவேண்டும். வயிறு தன்னை யுடையவன் கஷ்டங்களைக் கொஞ்சமும் கவனிப்பதில்லை. அதற்கு உள்நாடு, வெளிநாடென்று வித்தியாசமும் இல்லை. காலம் அகாலம் என்று கருதுவதும் இல்லை. அஃது இடம் பெயராமலேயே யிருந்துகொண்டு தன்னுணவை நன்றாக நிரப்பிக் கொள்கின்றது. அது தான் ஒரு பெரிய முழுச் சோம்பேறியாக விருந்தும், தனக்குப் பரிசாரணை செய்யக் கை கால் முதலான பல

வேலைக்காரர்களை நியமித்துக் கொண்டிருக்கின்றது. அதன் புண்ணியம் சிறந்தது.

படைவீரர்கள் உணவுக்கு என்னசெய்வதென்று ஸைதுல்லாகானைக் கேட்டார்கள். அவன் அரசர்களுடன் ஆலோசனை பண்ணினான். அப்பொழுது திருவண்ணாமலைத் தலைவனாகிய *சுபாங்கனென்பவனும் பிறரும் கிராமங்களிற் புகுந்து கொள்ளை கொள்ளலாமென்று கூறினார்கள். நவாப்பு, காலத்தையும் காரியத்தையு மநுசரித்து, அவ்வேற்பாட்டுக்கு அநுமதி யளித்தான். உடனே ஆயிரக் கணக்கான படைவீரர்கள் கிராமங்களிற்புகுந்து கொள்ளைகொள்ளத் தொடங்கினார்கள். அதனைத் தெரிந்த குலப்பெண்களிற் சிலர் கொல்லைக் கதவைத் திறந்துகொண்டு குழந்தைகளுடன் விரைந்து மறைந்தார்கள்.

சில படைவீரர் வைக்கோற் போரை யழித்தனர். சிலர் பயிர்களைப் பாழ்செய்தனர். சிலர் வீட்டிற் புகுந்தனர். சிலர் ஆடு மாடுகளைத் தேடிக் கொண்டனர். சிலர் அதட்டிக் கேட்டவர்களை அந்தகனுலகத்துக்குச் சொந்தமாக்கினர். சிலர் ஓடுகின்றவர்களை மடக்கிப் பொருளையும், பூஷணங்களையும் கொடுத்துப் போங்களென்று பிடித்திழுத்தனர். சிலர் 'ஹல்லாரே! ஹல்லாரே!!' யென்று கதவுகளை யுடைத்தனர். சிலர் 'அடி! அடி!' யென்றும், சிலர் 'பிடி! பிடி!' யென்றும் சிலர் 'உதை! உதை! யென்றும்' சிலர் 'குத்து! குத்தென்றும்!' சிலர் 'வெட்டு! வெட்டென்றும்!' வானம் பிளக்கக் கூவினர்.

சிலர் பெண்களும் குழந்தைகளும் அணிந்திருந்த வாபரணங்களைக் கொடுமையும் குரூரமுமாகக் கொண்டனர்.

---

* இவனுக்குச் சுபங்கிதுரை யென்றும் பெயர்.

அப்பெண்கள் 'எங்களைத் தொடாதிருங்கள்! நாங்களே கழற்றிக் கொடுத்து விடுகிறோ'மென்று கதறும் புலம்பொலி அவர்கள் காதில் விழவேயில்லை. அவ்வீரர்களுக்குத் தாங்களே தொட்டுக் கழற்றிக் கொள்வதி லுண்டாகின்ற சந்தோஷம் அவர்கள் சுதாவிற் கழற்றித் தருவதில் உண்டாகவில்லை.

அவர்களுடைய அந்தக் கொண்டாட்டக்களிப்பில் நசுங்கிப்போன குழந்தைகள் சில. உறுப்பிழந்த பெண்கள் சிலர். உயிர்துறந்த பெரியவர் சிலர். உள்ளம்பதைத்த புருஷர் சிலர். குழந்தைகளைப் பிரிந்ததாய்கள் சிலர். பொருள் போய்விட்டதென்று புலம்பினவர் சிலர். மானமழிந்ததற்கு வருந்தினவர் சிலர். ஆடு மாடுகளுக்குக் கலங்கினவர் சிலர். இங்ஙனம் அங்குள்ள அனைவரும் வருந்தி முறையோ! முறையோ! வென்று தெருக்கள்தோறும் கூக்குரலிடத்தொடங்கினார்கள். அரணிய வழுகையும் அரணிய நிலவும்போல அவர்கள் முறை அநாதரவடைந்தது. முடிவில், அவர்கள் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு செஞ்சிப் பட்டணத்துக்கு விரைந்து சென்றார்கள்.

சற்றுநேரத்துக்குள் அரண்மனையருகில் கூக்குரல் கிளம்பிற்று. ஜயஸிங்கு மன்னவன் வெளியில் வந்து என்னவென்று விசாரித்து நடந்த செய்திகளைத் தெரிந்துகொண்டான். அப்பொழுது அவனடைந்த கோபத்தை அளவுபடுத்திச் சொல்ல முடியாது: சூரனாதலால், அதனை யொருவாறடக்கிக்கொண்டு "என் னருமைக்குடிகளே! இனி நீங்கள் வருந்த வேண்டியதில்லை; இன்றிரவு மாத்திரம் கடவுள் அருள் முகம் நோக்கி என்னைப் பொறுத்துக்கொள்ளுங்கள்! பொழுது புலருவதற்குள் போருக்குவேண்டியவற்றைத் தயாரித்துக் கொண்டு அதிகாலையிற் புறப்பட்டுச் சென்று அவ்வரசனையும் அவன் படைவீரர்களையும் அரைநாழிகையில் ஹதஞ்செய்து

திரும்பி வருகிறேன்; என் அஜாக்கிரதையினால் நீங்கள் இப்பொழுதடைந்துள்ள நஷ்டத்துக்கு ஆறுகாட்டிலிருந்து ஒன்றுக் கைந்து விதம் ஈடுசெய்து உங்களைக் களிப்பூட்டாமல் இவ்வரண்மனைக்குத் திரும்புவதில்லை; அரண்மனையிலிருந்து போஜன பதார்த்தங்களைப் பெற்றுக்கொண்டு சமையற்செய்து சாப்பிட்டு இளைப்பாறியிருங்கள் முதலில்அந்தக் காரியமாகட்டும்'' என்று அவர்களுக்குச் சமாதானம் சொல்லிப்போனான்.

அவர்கள் அரசன் சமாதானத்தினால் ஆறுதலும் சந்தோஷமுமடைந்து, வயிற்றுக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினார்கள். ஜயஸிங்கு மன்னவன் முதலிற் றனது சேனாதிபதி மகம்மதுகானுக்குப் போர் மூண்ட செய்தியைப் புலப்படுத்தச்செய்தான். இரண்டாவது படைகளை ஒழுங்கு செய்யும்படி தளகர்த்தர்களுக்குக் கட்டளையிட்டான். ஜயஸிங்குமன்னவன் பகைவனையும், அவனது படைகளையும் சற்றும் பொருள் பண்ணவில்லை. 'அருக்கன் நம்மீது போருக்குப் புறப்பட்டுவிட்டானல்லவா? இந்த யானக்கேட்டை எப்படி நீக்கிக் கொள்ளப்போகிறோ' மென்றுதான் விசாரப் படலானான். அன்றிரவு செஞ்சிப் பட்டணத்தில் எவரும் நித்திரைகொள்ளவேயில்லை. கூட்டம் கூட்டமாகக் கூடியும், கும்பு சேர்ந்து பேசியும், இரவைக் கழிக்கலானார்கள். அதற்குள் அருக்க வரசன் படைகள் தேவனூரைக் கொள்ளையிட்டுக்கொண்டு செஞ்சிப் பட்டணத்துக்குச் சமீபத்தில் வந்துசேர்ந்தன.

## அதிகாரம் 17

### மகம்மதுகான் மணம்

சேனாபதி மகம்மதுகானுக்கு வழுதாவூரென்பது பிறப்பிடம். அது செஞ்சிக்கு இருபது மைல்மேற்கிலிருக்கின்றது.

அஃது ஒரு பெரியவூர். அவனுக்கு அன்று மணம். உறவின் முறையார் பலரும் ஒன்றாக வந்து திரண்டிருந்தார்கள். அரச னுக்கு அந்தரங்க நண்பனும், படைத்தலைவனுமான மகம் மதுகான் மணம் விமரிசையாக நடந்ததென்பதில் ஆச்சரிய மில்லை யல்லவா ? அவன் இயற்கையிலேயே செல்வமும் செல் வாக்கு முள்ள குலத்திற் பிறந்தவன்.

அவ்வூர் முழுவதும் பச்சைப்பந்தல் இட்டிருந்தது. தெருக்களிற் புதுமணல் பரப்பி ஒழுங்கு செய்திருந்தது.மகர தோரணங்களும் சித்திரத் தோரணங்களும் செம்மையாகத் துலங்கின. இளநீர்க்குலை, ஈச்சங்குலை, பாக்குக்குலை, பனங் குலை, கூந்தற் பனையின சடைக்குலை, வாழைக்குலை முதலிய பலவிதமான குலைகளைப் பந்தலில் கட்டித் தொங்கவிட் டிருந் தார்கள். பீங்கான் மண்ணினாலும், படிகத்தினாலும் செய்த பலவிதமான வர்ணச்சட்டிகளில் வளர்ந்த பலதேசத்துச் செடிகள் சிறிதும் பெரிதுமாகப் பந்தல் முழுவதும் பரப்பி யிருந்தன. நறு மணம் கமழும் விதம் விதமான இன்னடிசில் களும், பலகார வகைகளும் மலைபோலக் குவிக்கப்பட் டிருந் தன. பலவேலைக்காரர்கள் அவற்றை எடுத்தெடுத்து ஏழை களுக்குக் கொடுத்துக்கொண் டிருந்தார்கள். மணப்பறை கடலொலியை மட்டுப்படுத்திற்று. முகூர்த்தம் இரவானபடி யினால் மணவறை விசித்திர விரிப்புக்களாலும், விநோதவிளக் குக்களாலும் காவதம் வரையிற் கமழும் அத்தர் புனுகு முத லிய வாசனைத் திரவியங்களாலும் நன்றாக விளங்கிற்று. ஏழைகளும் தனிகர்களுமாக எள்ளிடவும் இடமில்லாமல் வந்து எம்மருங்கும் நிறைந்திருந் தார்கள். ஆட்டக் கச்சேரி யொருபுறம். பாட்டுக்கச்சேரி யொருபுறம், ஹாஸ்யக்கச்சேரி யொருபுறம். வாத்தியக் கச்சேரியொருபுறம். நாடகக் கச்சேரி யொருபுறம். ஜாலவித்தை யொருபுறம். ஒவ்வொன்றும் உத்த

மமானது. உயர்ந்த பட்டதாரிகளைக் கொண்டு நடத்தப் பெறுவது. வந்தவர் பலரும் விருந்துகளாலும் வேடிக்கைகளாலும் நண்பர்களாலும் சந்தோஷித்துத் தங்கள் காலத்தை அலுப்பின்றிக் கழிக்கத்தொடங்கினார்கள்.

மகம்மதுகான் மதாசாரத்தின் வண்ணம் மணக்கோலஞ் செய்யப்பட்டான். மஞ்சட் பட்டாடையை இடையில் தரித்தான். பச்சைக்கருப்பூரமும் குங்குமப்பூவுங் கலந்த கலவைச் சந்தனத்தை மார்பிற் பூசினான். இரத்தினகண்டி, இரத்தினப் பதக்கம், முத்துமாலை முதலான திவ்வியாபரணங்களை யணிந்தான். பூமாலையையும், பொற்சரிகை மாலையையும் வேய்ந்தான். பின்னர் ஷா ஆலம் டில்லியிற் கொடுத்த நீலவேணி யென்ற குதிரைமீதமர்ந்தும் மணப்பெண் முத்துச்சிவிகையிலமர்ந்தும் இருவருமாக வாத்திய வொலியும் வாழ்த்தொலியும் அதிகரிக்கப் பவனிவந்து மணவறையை அடைந்தார்கள். கற்றறிந்தகுருக்கள் மணமகனையும் மணமகளையும் உட்காருவித்து வைதிகவொழுங்கின் வண்ணம் செய்யவேண்டிய சடங்குகளைச் செம்மையாகச் செய்துவந்தார்கள்.

அந்தச் சமயத்தில் செஞ்சிப்பட்டணத்திலிருந்து புறப்பட்டுச் சென்ற குதிரைவீரர்கள் சிவபூஜை வேளையிற் கரடி நுழைந்தது போல மணவறையை யடைந்து திருமுகத்தை நீட்டினார்கள். மகம்மதுகான் கையிற் கொண்டிருந்த மங்கலப் பொருள்களைக் கீழே வைத்துவிட்டு வணக்கத்துடன் கடிதத்தை வாங்கிப் பிரித்துப் படித்தான். அப்புறம் அரைநிமிஷமும் ஆலோசனைபண்ணவில்லை. சிரித்துக்கொண்டு சபையிலுள்ளவர்களை நோக்கிப் "பெரியவர்களே! ஆறுகாட்டு நவாப்பு பெரும்படைகளைத் திரட்டிக்கொண்டு செஞ்சிப் பட்டணத்தின்மீது சண்டைக்கு வந்திருக்கின்றாராம்; நான் அதிகாலையிற் செஞ்சியிலிருக்கவேண்டும்; அரசர் கட்டளை அவ

சியமானது; உத்தரவு தாருங்கள்! பகைவரை வெற்றி கொண்ட பிற்பாடு வந்து மற்றைய மணத்தையும் முடித்துக் கொள்கிறேன்; போர் மூண்டிருப்பதைத் தெரிந்தும் மணத்தில் மகிழ்வதை வீரர்கள் விரும்பமாட்டார்கள்; என் போன்றவர்களுக்கு மணச் சோற்றினும் இரணச்சோறு உருசியுள்ளது; கட்டளை கொடுங்கள்” என்றான்.

உறவின் முறையார் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் என்ன செய்யலாமென்று ஏக்கம் கொள்ளலானார்கள். அப்பொழுது தாயும் தந்தையும் எதிரில் வந்து "அன்புள்ள மகனே! எங்கள் வார்த்தையைக் கேள்!உன் வார்த்தையைக்கேட்டுப் பெண்வீட்டுக்காரர் பெரிதும் வருந்துகிறார்கள்; பிறர் நம்மால் வருத்தமடையலாகாது;இப்பொழுது இரவுபாதிக்கு மேலும் கழிந்துபோயிற்று; பன்னிரண்டு நாழிகைப் பொழுது தான் இருக்கும்;அந்தப் பன்னிரண்டு நாழிகையும் இங்கிருந்து மணத்தை முடித்துக்கொண்டு காலையில் புறப்பட்டுப் போ! பகல் பதினைந்து நாழிகைக்குள் செஞ்சிப் பட்டணம் சென்றுவிடலாம்; விருந்துமுதலிய மற்றைச்சடங்குகளை நாங்கள் இருந்து நடத்திக்கொள்ளுகிறோம்; மணம்நின்றுபோயிற்றென்றுண்டாகும் பரிகாசத்துக்கும் இடமிராது; நன்றாக யோசனை செய்துபார்! பொருட் செலவினும் அவமானம் பெரியது” என்று சொன்னார்கள்.

மகம்மதுகான் “அம்மா! நான் என்ன செய்யட்டும்? என் வேலை அப்படிப்பட்டது; நமது சவுகரியங்களையாவது நாள் முதலியவற்றையாவது சண்டை எதிர்பார்ப்பதில்லை; நாளை பதினைந்து நாழிகைவரையில் பகைவன் பொறுத்திருந்து போர் தொடங்குவானோ? சாதுரியமாகச் சண்டை செய்தால் அதற்குள் பாதியும் முடிந்துபோய்விடுமே; கோட்டைக்குவெளியில் பகைவன்வந்துவளைந்து படைவீரர்களோடு

ளோடு சிங்காதம் செய்து சிரித்துத் திரிகிறான்; சேனைத்தலைவன் சிற்றின்பத்தை நினைந்து திருமணக்கோலம் கொண்டு சிறந்து விளங்குகிறான்; இஃது ஒழுங்காகுமா? அரசர் பொக்கிஷத்தைத் திறந்து பொருள்களைக் கணக்கின்றிச் செலவிட்டுப் படைகளைப் பெருக்கிவந்தது சமயத்திற் பயன்படவேண்டாமா? சேனைத்தலைவன் சமயத்திற் சாக்குச்சொல்லித்தப்பித்துக் கொண்டுவிட்டா னென்றுண்டாகும் வசையைக்காட்டிலும் வெற்றிகொண்ட பிற்பாடு விவாகத்தை நிறைவேற்றிக்கொள்வது வசையாகுமா? எனக்கு விடைதாருங்கள். "பகைவன் திரட்டி வந்திருக்கும் படைத்திமிரை யடக்கித் திரும்பி வருகிறேன்" என்று நிலம் தொட்டு வணங்கி வெளியில் வந்து விட்டான். அவன் சொல்வது நியாயமாக விருந்தபடியினால், அங்குள்ளவர்களில் ஒருவராவது மறுத்துச்சொல்லவில்லை. அவன் தன்னுடனிருந்த படைவீரர்களைப் போர்க்கோலம் கொண்டு பயணப்படக் கட்டளையிட்டுத் தான் முந்திக் குதிரை யேறிக் காற்றினுங் கடுகிச் செஞ்சிப் பட்டணத்தைச் சேர்ந்தான்.

மகம்மதுகான் மணக்கோலத்தையும் களையாமல் மணத்தையும் முடியாமற் சமயத்தில் விரைந்து வந்தது ஜயஸிங்கு மன்னவனுக்குச் சந்தோஷந்தான். அவன் யுத்த சம்பந்தமாக ஆகவேண்டிய காரியங்களை அவனுடன் கலந்து ஆலோசனை செய்துவிட்டுப்போர்க்குப்புறப்படும்படிகட்டளையிட்டு அரண்மனை சென்றான்.

# அதிகாரம். 18

## கடவுள் தரிசனமும் போர்ப்பயணமும்

*அகக்கரணம் புறக்கரணமென்று மனிதர்க்கு இரண்டுவிதமான கருவிகளிருக்கின்றன. அகக்கரணத்தின் றூண்டுதலாற் புறக்கரணங்கள் தொழில்செய்யும். அகக்கரணங்களில் ஒரு பகுதியின்முயற்சியினுல் உலகப்பொருள்கைகூடும். மற்றொரு பகுதியின் முயற்சியினுற் கடவுளுலகம் சித்திக்கும். ஒரு பகுதிக்கு மற்றொரு பகுதி துணைசெய்யாது. அவற்றின் தொழில் வேறுவேறு. ஒருவனை ஆசையுமன்பும் உலகத்தில் அமிழ்த்த வமிழ்த்த அறிவும் ஞானமும் மேலே உயர்த்தும். மக்கள் யாக்கையின் பயன் உலகப் பொருள்களை மேலும் மேலும் பெற முயற்சிப்பதன்று. தனக்கும் கடவுளுக்கும் இடையில் வளர்ந்திருக்கின்ற பெருங்காடுகளை யழித்து வழிச்செய்து கொண்டு, தன்னிலக்கணத்தையும், கடவுளிலக்கணத்தையு மறிந்து, கடவுளிடத்திற் பக்திசெய்வதே யாகும். பக்தி அறிவை வளர்க்கும். அறிவு ஞானத்தைக் கூட்டும். ஞானம் வீட்டையடைவிக்கும்.

பொருள், ஒருவன் உள்ளத்தையும் ஒழுக்கத்தையும் பிரதிபிம்பிக்கச்செய்கின்ற கண்ணுடிபோன்றது. உலகப்போராட்டத்தில் இழுத்துவிட்டு உபத்திரவப்படுத்துவது அதன்இலக்கணம். அதனுற்றுன்,பெரியவர் பொருளைவிரும்புவதில்லை. இன்னும் ஒருவர்பொருளையும் பதவியையும்கொண்டு ஞானத்தையும் வீட்டையும்விலைக்குப்பெறமுடியாது. உலகத்திற் பொருளையும் பதவியையும் கொடுத்துஒருவன தொழுக்கத்தைப் பரிக்ஷிப்பதுபோலக் கடவுள் இருவகைக் கரணங்களையும் கொடுத்

*அகக்கரணம் - அறிவு. புறக்கரணம்—உடல்.

துநம்மைப்பரிக்ஷிக்கிருர். தீர்க்கதரிசிகளான பெரியவர்கள் அந்தப்பரிசைக்ஷயில் மாணுக்கர்களைப் பயிற்சிசெய்விப்பதன் பொருட்டுத்தான் பக்திவழி, யோகவழி, ஞானவழி, நோன்புவழி, ஈகைவழி யென்று எண்ணிறந்த கலாசாலைகளைத் திறந்திருக்கிருர்கள். ஒவ்வொருகலாசாலையும் உத்தமமானது.

பரந்த வுலகத்திற்கு அந்தப் பலவிதமான கலா சாலைகளும் அவசியமானது. கலாசாலைகளிலும் அவை கற்பிக்கும் மார்க்கங்களிலும் ஒன்றுக் கொன்று வித்தியாசமில்லை. உணவுகள் பலவாயிருப்பினும், உண்டபின் விளையும்பயன் ஒன்றேயாவதுபோலக், கலாசாலைகளின் கற்பனைகள்யாவும் முடிவில், ஒருபொருளையே சமீபிக்கின்றன. அதனுல், தபசுசெய்யினும், தெருவில் திரியினும், அரசு புரியினும், அதிகாரம் செலுத்தினும் ஒவ்வொரு நாளிலும் நாம் கடவுளுக்கு எவ்வளவு சமீபத்திலிருக்கிருேமென்று கவனித்தறியவேண்டும். 'ஆரியக்கூத்தாடினுலும் காரியத்திற்கண் இது தான் அறிவுள்ளவர்களி னிலக்கணம்.

ஜயஸிங்கு மன்னவன் ஒரு பெரிய விஷ்ணுபக்தன். அவன் கோலகிரியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள அரங்கநாதரை ஒருநாளாவது தரிசனம் பண்ணுமலிருக்கமாட்டான். அவன் அன்றும் நீராடி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு கடவுள் சந்நிதிக்குச் சென்ருன். பாந்தட் சயனத்திற் பள்ளிகொண்ட கடவுள் வடிவத்தைக்கண்டு அவன் கண்கள் ஆநந்தவருவிசொரிந்தன.உடம்பு புளகித்தது. நா தழதழத்தது. உலகமும் உலகப் பொருள்களும் அவனுக்கு முற்றிலும் மறைந்துபோயின. ஐம்பொறிகளின றிவைக்கண்கள் கவர்ந்தன. அந்தக்கரணங்களின் தன்மையை அறிவுஅபகரித்தது. இராஜசம், தாமசம், சாத்துவிகமென்ற முக்குணங்களிற் சாத்துவிகம் மிகவும் தலையெடுத்தது.

அவன் பரந்தாமன் பாதத்திற் பலமுறையும் விழுந்து வணங்கினான். சிரத்தில் கரத்தைக் குவித்துக்கொண்டு

"பச்சைமா மலைபோல் மேனி, பவளவாய், கமலச் செங்கண்
அச்சுதா ! அமரர் ஏறே ! ஆயர்கள் கொழுந்தே யென்னும்
இச்சுவை தவிர, யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும், வேண்டேன்; அரங்கமா நகரு ளானே!"
"மனத்திலோர் தூய்மை யில்லை; வாயிலோர் இன்சொ லில்லை;
சினத்தினாற் செற்றம் நோக்கித் தீவிளி விளிவன் வாளா,
புனத்துழாய் மாலை யானே ! பொன்னிசூழ் திருவ ரங்கா !
எனக்கினிக் கதியென் சொல்லாய்!என்னையாளுடையகோவே!
தொண்டரடிப்பொடி.

என்று பலவாறு துதிக்கத் தொடங்கினான்.

அப்பொழுது அறவாழி யந்தணராகிய அந்தப்பரந்தாமர் அவனுக்கு இனி அமரிலுண்டாகவிருக்கும் அபஜயத்தை அறிவிக்கும் நிமித்தம் அலர்மாதுறையும் தமது அழகிய மார்பிலணிந்திருந்த துளவத் தாமத்தைக் கருக்கிச் சுடுநாற்றத்தை யுண்டுபண்ணினார். கடவுளிடத்துக் காணும் அந்த மாறுபாட்டுக்கு ஜயஸிங்கு மன்னவன் கலக்கமடையவில்லை. கோபம் மாத்திரம் கொண்டான்.

அவன் "சூரர்தலைவரே! சண்டையில் தைரியம் அதிகரிக்கவேண்டு" மென்று நான் தங்கள் திருவடியைத் தரிசிக்க வந்திருக்கிறேன்; சருவக்ஞராகிய தங்களுக்கு என்னெண்ணம் உள்ளங்கை நெல்லிக்கனி; இஷ்டமிருந்தால், அந்தவரத்தைத் தரலாம்; இல்லாதுபோனாற் சும்மா விருக்கலாம்; தாங்கள் இரண்டையு மொழித்து எனக்கிப்பொழுது அதைரியம்தரும் அறிகுறிகளை யுண்டுபண்ணுகிறீர்கள்; இதனைப் பெற்றுச் செல்வதற்குத் தங்களை நாடி நான் இத்தனைதூரம் வந்திருக்க வேண்டியதில்லை; எல்லாமறிந்தவரே! என்போன்ற

உயிர்களுக்கு இறப்பும் பிறப்பும் என்றுமியற்கை; பகலும் இரவும்போலப் பிறப்பிறப்புக்கள் எங்களுக்கு மாறிமாறி வந்துகொண்டே யிருக்கும்; இறப்பின்பொருட்டு எங்களுக்குத் துக்கம் கிடையாது; நீர்மே லெழுத்துபோல உடம்பு நிலையற்றது.

"உறங்கு வதுபோலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு." திருவள்ளுவர்.

என் முறையைக் கேளுங்கள்! இந்தச் சண்டையை நானாகத் தயாரித்துக் கொள்ளவில்லை; தானாகவே வந்திருக்கின்றது; நான் என்ன செய்யட்டும்; பகைவன் வந்து பட்டணத்தை முற்றுகை யிட்டிருக்கிறான்; தங்கள் சகுனத்துக்குப் போருக்குச் செல்லாதே யென்று பொருளாகின்றது; இப்பொழுது கோட்டைக் கதவை மூடி முத்திரை யிட்டுக் கொண்டு தங்களைப் போல அரண்மனையிற் படுத்துத் தூங்கச் சொல்கிறீர்களா? அல்லது, பகைவன் காலில்விழுந்து பணியச் சொல்கிறீர்களா? ஒருசமயம் தங்கள் எண்ணத்தின் வண்ணம் சென்று துருக்கனைப் பணிவதாக வைத்துக் கொண்டால், என்னைச் சிரஞ்சீவியாக்க நினைத்திருக்கிறீர்களா?

"தன்னுடை யாற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக;—பின்னர்ச்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காங்கு
இறுவரை யில்லை யெனின்? குமாருபரர்.

அன்புள்ளவரே! தங்கள் உபதேசம் வேண்டியதில்லை; நான் பகைவனைப் பணிந்து வேண்டிக் கொள்ளமாட்டேன்; தாங்கள் அநியாயம்செய்பவனுக்கே அநுக்கிரகம்செய்யுங்கள். நான் எதிர்த்து நிற்கச் சித்தனாயிருக்கிறேன்;

வெற்றியை பற்றியகவலைஎனக்குவேண்டியதில்லை; அது சேற்றில் நட்ட கம்பம்; இரத்தப் பெருக்கின் முன்னிலையிற்

கிடைக்கக்கூடியது; என்கடமை தொழில் செய்வது; தங்கள் கடமைபயன்றருவது; என் கடமையை நான் செய்யச்செல்கிறேன்; தங்கள் திருக்கருணை மாத்திரம் மாறுதிருக்கட்டும்; இந்தவொருவரம்தான் தங்களை வேண்டிக்கொள்வது; வேண்டுவது என்னிஷ்டம்; தருவது தங்களிஷ்டம்;

"ஊழிற் பெருவலி யாவுள ? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்." திருவள்ளுவர்.

விடை கொள்கிறேன்; தங்கள் நற்றாள் எனக்கு நல்ல துணை என்று வணங்கி அரண்மனை வந்துசேர்ந்தான்.

பிற்பாடு ஜயஸிங்கு மன்னவன் அந்தணர்க்குத் தான தருமங்களைச் செய்து அறுசுவையுடன் கூடிய அன்னம் புசித்து அடைகாய் இலை தின்று போர்க்கோலம் பூண்டான். இயற்கை யழகில் மிக்கவனாதலால், அவன் போர்க்கோலம் வெகு சிறப்பாக்விளங்கிற்று. அஃது இராமன் அருச் சுனன் முதலிய வெற்றி வீரர்களை அனைவருக்கும் நினைப்பூட்டிற்று. உடனே மனைவியைக் காணவேண்டுமென்று அந்தப்புரஞ் சென்று தனது வருகையைத் தெரியப்படுத்தினான்.

பத்மினிபாய் புஷ்பிணியான நாள் தீயதென்றும், ஸதி பதிகள் ஈராண்டு வரையில் ஒருவரை யொருவர் சந்திக்க லாகாதென்றும், சோதிட சாஸ்திரிகள் சொல்லியிருந்தார்கள். அந்தத் தவணையில் பெரும்பாகமும் கழிந்து போயிற்று. இன்னும் இருப்பது ஐந்தாறு நாட்களே யாகும். ஜயஸிங்கு மன்னவன் அதனை மறந்துபோகவில்லை. அவசியமான சமயங்கள் தோறும் நடுவிற் றிரையிட்டு இருவரும் பேசிவருவார்கள். அவர்கள் சம்பாஷிக்கும்பொழுது செவிலித்தாய் இடையிலிருப்பது வழக்கம். இராஜ்ய சம்பந்தமான எல்லா விஷயங்களையும் அவன் மனைவிக்குச் சொல்லுவான். ஆளுகை விஷயத்தில் அவளுக்கு ஞானமுண்டு. பாலியப்பருவத்தில் பிதாபீமஸிங்கு

மன்னவர் அதனை நன்றாகக் கற்பித்திருக்கிறார். ஜயஸிங்கு மன்னவனுக்கு முன்கோப முண்டென்பதை மனைவி யறிந்து, அறிவில்மிகுந்த வமைச்சன் போல ஆகுங்காரியங்களுக்கு ஆலோசனை சொல்வது வழக்கம். பரிசாரகப் பெண்கள் நடுவிற்றிரையிட்டு இருவருக்கும் ஆசனங்களை யமைத்திருந்தார்கள்.

ஸைதுல்லாகான் தூதனுப்பினது முதல் முற்றுகை வரையிலுமுள்ள விஷயங்களை அவள் மிகவும் விளக்கமாக வறிவாள். இரவு முழுமையும் செய்யப்பட்டு வருகின்ற போருக்குரிய பிரயத்தனங்களும் நன்றாகத் தெரியும்.

**பத்மினிபாய்:**—பிராணநாதா! படைகள் போருக்குப் புறப்பட்டனவா? படைத்தலைவர் மணத்தை முடிக்காமலும் மணக்கோலம் களையாமலும் இப்படி விரைந்து வருவானேன்? இரவு முழுமையுமாவது இருந்து வரும்படியெழுதலாகாதா?

**ஜயஸிங்கு:**—விஷயங்களைத் தெரிவித்தேனே யல்லாமல் விரைந்து வரும்படி யெழுதவில்லை; அவனுக்குப் போரென்றால் பொங்கற் பண்டிகை. அதனிலும் ஸைதுல்லாகான் வந்திருக்கிறானென்றால் சொல்லவேண்டியதில்லை.

**பத்மினிபாய்:**—எல்லாப் பாளையப்பட்டுச் சிற்றரசர்களும் போருக்கு வந்திருப்பார்கள். ஸைதுல்லாகான் தந்திரத்திற் றேர்ந்தவன்.

**ஜயஸிங்கு:**—வந்திருந்தால் என்ன? ஒற்றுமையின்றியே அனைவரும் ஒன்று சேர்ந்திருக்கின்றனர். ஒவ்வொருவருக்கும் எண்ணங்கள் வேறு வேறு.

**பத்மினிபாய்:**—எண்ணங்கள் வேறுவேறாயினும் சமர் முகத்திற் செய்யும்தொழில் ஒன்றேயொன்றுதான். அலக்ஷ்யமாக விருக்கலாகாது. படைகளையும் தங்களையும் பாது

காத்துக் கொள்ளுங்கள். இரணக்களத்தின் செய்திகளை அவ் வப்பொழுது அடியாளும் அறியச் செய்யுங்கள்.

ஜயங்ஸிகு:—அதற்கென்ன? அறிவிக்கிறேன்.

பத்மினிபாய்:—இரண்டொருநாட்கள் பாசறையிலேயே யிருக்கவேண்டி வருமோ?

ஜயஸிங்கு:—இன்று மாலைக்குள்ளாகவே ஒரு விதமான முடிவுக்கு வரலாமென்று எண்ணுகிறேன்.

பத்மினிபாய்:—அவ்வளவு சீக்கிரத்திலேயா?

ஜயஸிங்கு:—ஆம், பகல் பதினைந்து நாழிகைக்குள்ளா கவே அவன் படைகள் சிதறி யோடலாமெனத் தோன்று கின்றது.

பத்மினிபாய்:—கடவுள் அவ்வண்ணமே கருணை செய் யட்டும்.

ஜயஸிங்கு :—நாழிகை யாயிற்று. சென்று வருகிறேன்.

பத்மினிபாய்:—வெற்றியை நிலை நிறுத்துங்கள்" என்று சொல்லிச் செவிலித்தாயின் மூலமாகத் தாம்பூலம் கொடுத் தனுப்பினாள்.

ஜயஸிங்கு மன்னவனுக்கு அவ்வசனம் சுறுக்கென்று பட்டது. ஏனென்றால் கடவுள் சந்நிதானத்தில் அவன் ஏற் கெனவே அபசகுனமொன்று கண்டிருக்கிறான். அதனுடன் மனைவி 'நிறுத்தி வாருங்களென்று' சொல்லாமல் நிறுத்துங் களென்று சொல்லித் தாம்பூல மனுப்பியிருக்கிறாள். இரண் டையும் கூட்டிப் பார்க்கும்பொழுது அவனுக்குச் சற்றுக் கலக்கமுண்டாயிற்று. சூரர் சிகாமணி யாதலால், வெளிக் குத் தெரியவிடவில்லை. 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லி வெளியில்வந்தான். 'நிறுத்திவாருங்க'ளென்று சொல் லாமல் 'நிறுத்துங்க' ளென்று சொல்லித் தாம்பூலம் தந்தது

சகுன விரோதமென்று அவன் மனைவியும் அப்புறம் எண்ணி வருந்தினாள். தற்செயலாக அங்ஙனம் சொல்ல நேர்ந்த தென்றும், அது துர்க்நிமித்தத்தின் அறிகுறியென்றும், அரசர் என்ன நினைத்துக் கொள்ளுவாரோ வென்றும், அதன் பொருட்டுக் கடவுள் கருணை புரியவேண்டுமென்றும் நினைத்து, அரங்கநாதரைத் தரிசித்து வரச்சென்றாள்.

ஜயஸிங்கு மன்னவன் படைகளிருக்கும் இடத்துக்கு வந்தான். அதற்குள் படைத்தலைவன் எல்லாப் படைகளையும் ஒன்று சேர்த்து அரசன் வரவை யெதிர் நோக்கியிருந்தான். படைவீரர்கள் பரிசுத்தமான வுடைகளை யுடுத்திருந்தார்கள். அவர்கள் இடைகளிலும் கரங்களிலும் கத்தி, கேடயம், துப்பாக்கி முதலான வாயுதங்கள் துலங்கின. அனைவர் முகத்திலும் உற்சாகமும் சுறுசுறுப்பும் ஒன்று கூடி விளங்கின. அவர்கள் குதிரைமேல் வரும் தங்கள் கொற்றவனைக்கண்டதும் 'ராஜா ஜயஸிங்கு மன்னவருக்கு ஜயமுண்டாகுக; ராஜா ஜயஸிங்கு மன்னவருக்குக் கடவுள் கருணை புரிக; ராஜாஜயஸிங்கு மன்னவர் செங்கோல் ஓங்குக;' என்று பேர் வாத்தியங்களை முழக்கி ராஜகீதம் பாடினார்கள்.

ஜயஸிங்கு மன்னவன் அவர்கள் எதிரில் வந்து நின்று "எனது அருமைவீரர்களே! நீங்கள் அனைவரும் இராஜபக்தியுள்ளவர்கள்; கடமையை அறிந்தவர்கள்; தேசாபிமானத்திற் சிறந்தவர்கள்; இந்தராஜ்யத்தில் எனக்குள்ள பொறுப்பு உங்களில் ஒவ்வொருவருக்கும் இருந்து வருகின்றது நாட்டில் அமைதி யுண்டுபண்ணுவதும், அமைதிக்குண்டாகும் கெடுதிகளைக் களைந்தெறிவதும், செல்வவிருத்தி செய்வதும், நமதுதொழில். இவற்றில் ஒன்று உங்களுக்குச் சொந்தம்;

இரண்டை நான் அமைச்சர்களுடன் ஆலோசித்து அமைத்து வருகிறேன்; நாம் தொடங்குவது தருமயுத்தம்; நாம் பிறர் பொருளைக்கண்டு பேராசைப் படவில்லை.; பிற அரசை அபகரிக்க எண்ணவில்லை.

"ஆறுகாட்டரசன் அக்கிரமமாக நம்மீது வலுச்சண்டைக்கு வந்திருக்கிறான்; அவன் படைத்திமிரை அடக்க வேண்டும்; நீங்கள் யாவரும் படைத்தலைவரால் நன்றாகப் பயிற்சி பெற்றிருக்கிறீர்கள்; யுத்த வீரர்களுக்கு இரும்புக் கவசத்தினும் தைரியம் சிறந்த கவசம்; நமது தாய் நாட்டைக் காக்கும் பொருட்டுப் போருக்குப் புறப்படுகிறோம்; பகைவன் படை நன்றாக முரிந்துபோகும் வரையில் போரைக் கைவிடலாகாது. மரணம் ஒருவன் உறங்குவதுபோலவும், ஜநனம் அவன் எழுவது போலவுமாகும். நாம் மரணத்துக்கு அஞ்ச வேண்டியதில்லை. வெற்றியடைந்தால், வீரர்கள் என்று புகழப்படுகிறோம். சண்டையிலிறந்தால், வீரச் சுவர்க்கத்துக்கு விருந்தினராகிறோம்; இரண்டு விதத்திலும் புகழ் கிடைக்கின்றது; இப்பொழுது சென்று உங்கள் திறமையை வெளிப்படுத்துங்கள்; ஊக்கத்துடன் பகைவரைவென்று வாருங்கள்" என்று கூறினான். அனைவரும் 'ராஜா ஜயஸிங்கு மன்னவருக்கு ஜே! ராஜா ஜயஸிங்கு மன்னவருக்கு ஜே' யென்று வானம் பிளக்கும்படி வாழ்த்திப் பகைவர்களை நோக்கிப் புறப்பட்டார்கள்.

ஜயஸிங்கு மன்னன் படைகள் போர்க்கோலம் பூண்டு புறப்பட்டன. முன்னணியில் யானைப் படைகள் சென்றன. அவற்றின்பின் குதிரைப்படைகள் போயின. பின்னர்ப் பதாதிகள் புறப்பட்டார்கள். தளகர்த்தர்கள் அழகிய குதிரைகளிலமர்ந்து பக்கங்களிற் சென்றார்கள். யுத்த பேரிகைகளும் வாத்தியங்களும் ஒன்று சேர்ந்தொலித்துத் திசைகளையும்

வானத்திலும் பரந்தன. வீரர்கள் முகத்திற் சந்தோஷம் ததும்பிற்று. சிலர் 'துருக்கன் நம்முடையவற்றில் நாலைந்து கிராமங்களை நாசப்படுத்தி யிருக்கிறான்; அதற்கீடாக, நாம் ஆறுகாட்டுக்குச் சென்று நாற்பது ஐம்பது கிராமங்களை நாசப்படுத்தி வரவேண்டும்; பகைவினை வென்றதும் பட்டணம் திரும்பலாகாது' என்று ஒருவரோ டொருவர் பராக்கிரமம் பேசினார்கள். சிலர் 'துருக்கனை விடக்கூடா'தென்றார்கள். சிலர் 'செய்கையில் தெரிவிக்கலா' மென்றார்கள். இங்ஙனம் மனம் வந்தபடி கம்பீரமாகப்பேசிக்கொண்டு அவர்கள் இராஜ வீதியின் வழியாகக் கோட்டை வாயிலைக் கடந்து ஆற்றங் கரையை யடைந்தார்கள். வெள்ளத்தைக் கண்டதும் அவர்களுக்குத் திகைப்புண்டாயிற்று.

# அதிகாரம் 19

## தந்திரம்

செஞ்சிப் பட்டணத்தில் இரவு முழுவதும் போருக்குரிய முயற்சிகள் பிரமாதமாக நடந்து வருகின்ற தென்றும், அவர்கள் அதிகாலையிலேயே தங்களை யெதிர்ந்து வந்து தாக்குவார்க ளென்றும் ஒற்றர்கள் ஸைதுல்லாகானுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவன் அவர்கள் அவ்வளவு சீக்கிரத்தில் தன்னை யெதிர்க்கத் தயாராவார்களென்று எதிர்பார்க்கவில்லை. அன்று முழுவதும் சென்று விடுமென்று நினைத்திருந்தான்.

"ஜயஸிங்கு மன்னவனும் தலைமைச் சேனாதிபதியும் சேர்ந்திராத சமயத்திற்றான் செஞ்சியைத் தாக்கவேண்டும்; ஏககாலத்தில் இருவரையும் எதிர்க்க முடியாது; வெற்றியும் கை கூடாது; இப்பொழுது மகம்மதுகான் மணஞ்செய்து

கொள்வதன் பொருட்டு வழுதாவூருக்குச் சென்றிருக்கிறான்; அவன் திரும்பிவரக்குறைந்தது ஒருவாரம்செல்லும்; அதற்குள் முற்றுகையிட்டால், வெற்றியைப் பெறலாம்; படைகளைத் திறமையும் ஒழுங்குமாக நடத்தப் படைத்தலைவனை யல்லாமல் வேறு சிறந்த மனிதர் செஞ்சியில் இல்லை" யென்பது ஸைதுல்லாகான் எண்ணம். இப்படி நினைத்துக்கொண்டுதான் இரவும் பகலுமாக நடந்து முற்றுகை செய்திருக்கிறான்.

மகம்மதுகான் மணத்தைவிட்டு வந்ததும், பன்னிரண்டு மணிக்குள்ளாகவே படைகள் யுத்தஞ் செய்யச் சித்தமானதும், அவனுக்குக் கலக்கத்தை யுண்டுபண்ணின. அவன் பரபரப்புடன் படைகளை ஒழுங்கு செய்யக் கட்டளையிட்டான். வந்திருப்பது வேற்று நாடானதால் அவ்வளவு அவசரத்தில் ஒழுங்கு படவில்லை. ஆகவே, எதிரிகளை இரணகளத்துக்கு வரவிடாமற் சற்று நேரம் தடுப்பது அவனுக்கு மிகவும் அவசியமாயிற்று.

செஞ்சியின் தன்மையை அப்பொழுது அறிந்திருந்த திருவண்ணாமலைத் தலைவனான சுபாங்கனென்பவன் "மேற்கில் தாழனூர் மலையனூர் என்று இரண்டு கிராமங்களிருக்கின்றன; அவற்றின் ஏரிகளில் தண்ணீர் கரை புரளுகின்றது; அவற்றை யுடைத்துவிட்டால் அந்நீர் சங்கராபரணி யாற்றிற் பெருகியோடும்; அது சற்று நேரம் வரையில் சத்துருவின் வருகையைத் தடுக்கும்; அதற்குள் நம்படைகளை ஒழுங்குபடுத்தி யமைத்துக் கொள்ளலாம்" என்று ஆலோசனை கூறினான். அதனிலும் வேறு சிறந்த வுபாயத்தை ஒருவரும் சொல்லவில்லை. அதனால், அவ்வேரி கரையை உடைத்துத் திறந்து விடும்படி ஸைதுல்லாகான் விடியற் காலையில் கட்டளை யிட்டான்.



# அதிகாரம் 20

## மகம்மதுகான் சண்டையும் மரணமும்

கார்காலமும் கூதிர்காலமும் எப்பொழுதோ கழிந்து போயின. பனிக்காலம் பிறந்து வளர்ந்து தவழ்நடை கற்கின்றது. மூடுபனி சூரியன் ஒளியையும் பொருள் பண்ணவில்லை. உலகத்திற் குளிர் மிகுந்தது. நீர் நிலைகளில் தண்ணீர் தெளிந்து கொஞ்சம் கொஞ்சமாகக் குறையத் தொடங்கிற்று. தாமரைகள் முகம் கருகிப் பொலி விழந்தன. குளிரின் கொடுமையினாற் பறவைகள் கூடப் பாட்டை மறந்தன. தானியங்கள் கொஞ்சம் கொஞ்சமாக அறுப்புண்டு களத்தை யடைந்தன. மாமரங்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாக மெள்ள மெள்ள அரும்பத் தொடங்கின. ஆற்றங்கரை முழுவதும் அழகியசோலை. எத்தனை நாழிகை வேலைசெய்தாலும் இளைப் புண்டாகாது. பயிர்த்தொழிலைச் செய்வோர் தானியங்களைத் தூற்றியும் உலர்த்தியும் களஞ்சியங்களில் மெதுவாகக் கொண்டு சேர்ப்பார்கள். பலவகைத் தானியங்களும், கதிர்ப் போர்களும் சங்கராபரணியாற்றங்கரையிற் கணக்கின்றிக் குவித்துக் கிடந்தன.

ஆற்றில் வெள்ளம் அதிகரித்தது. நீரிரைச்சல் நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகிற்று. வெள்ளம் இருகரைகளிலும் புரண்டு பெருகிக் கொள்ளைக் காரர்களைப் போல அகப்பட்டவற்றை யெல்லாம் அடித்துக் கொண்டு சென்றது. உடைமைக்காரர்களுக்கு அதனைக் கண்டதும் ஊக்கம் குறைந்தது. கைக்குக் கிட்டின வொன்று வாய்க்குக் கிட்டவில்லை. என்ன செய்வார்கள்? உழைப்பின் பலன் அங்ஙமழிந்து போவது அவர்களுக்குச் சம்மதமாகுமா? மழை எங்குப்பொழிந்த

தென்பாரும், வெள்ளம் எப்படி வந்ததென்பாரும், தானியங்கள் வெள்ளத்தில் அழிந்துபோயின வென்பாரும், உணவுக்கு என்னசெய்வோ மென்பாரும், குழந்தைகள் அக்கரையில் அகப்பட்டுக் கொண்டுவிட்டன வென்பாரும், மறுபடியும் எப்படிக் காணப் போகிறோமென்பாருமாக ஆங்காங்குக் கும்புகூடிப் புலம்பத் தொடங்கினார்கள்.

அப்பொழுது ஒற்றர்கள் வந்து அரசனைப் பணிந்து ஆறுகாட்டரசன் படைகளைத் தயாரித்துக் கொள்வதன் பொருட்டுத் தாழனூர் மலையனூரென்ற கிராமங்களின் ஏரிக்கரைகளை யுடைத்துத் தண்ணீர் பெருகவிட்ட சூழ்ச்சியைத் தெரியப்படுத்தினார்கள். அதனைக் கேட்டதும் ஜயஸிங்கு மன்னவனுக்குக் கோபம் மூண்டு வளர்ந்தது. கண்கள் உருண்டு சிவந்தன. மீசைகள் நிமிர்ந்து துடித்தன. உதிரம் கொதிப்பெடுத்தது. பற்கள் கடிப்புண்டன. சொற்கள் சுவை திரிந்தன. பின்னர் அவன் "வீரர்களே! துருக்கன் தந்திரத்தைத் தெரிந்து கொண்டீர்களல்லவா? அவனிடத்திற் கொஞ்சமும் கருணை காட்டலாகாது; அவனையும் அவன் படைகளையும் சித்திர வதை செய்ய வேண்டும்; ஏரி நீராதலால், வெள்ளம் அடங்கிப்போகும்; ஆற்றைக் கடக்கும் ஆற்றலுடையவர் மாத்திரம் தொடர்ந்து வாருங்கள்! மற்றவர் வெள்ளம் வடிந்த பின்னர் வந்து சேரட்டும்." என்று சொல்லித் தனது பஞ்ச கல்யாணியைத் தட்டிவிட்டான்.

அந்த வொப்பற்ற குதிரை வெள்ளத்தை இலக்ஷ்யம் பண்ணவே யில்லை. அது நெடுந்தூரம் பின்னுக்கிடைந்து ஓரே பாய்ச்சலில் அச்சிற்றாற்றின் அக்கரை சேர்ந்தது. படைத்தலைவனது நீலவேணிக் குதிரையும் அதனைத் தொடர்ந்து போயிற்று. அவர்களைப் போலவே குதிரை வீரர்கள் பலரும் ஆற்றிற்குதித்து அக்கரை சேர்ந்தார்கள்.

யானைப்படைகள்மாத்திரம் எளிதிற்கடந்து போயின. மொத்தத்தில் ஐந்நூறு குதிரை வீரர்களுக்கும் அதிகமாக ஆற்றைக்கடந்து வந்து விட்டார்கள். பதாதிகளும், வேறு சில பாசறைவீரர்களு மாத்திரம் ஆற்றின் வடிவை நோக்கியிருந்தார்கள். வெள்ளமும் நிமிஷத்துக்கு நிமிஷம் வடிமுகம் காட்டத் தொடங்கிற்று.

ஆற்றைக் கடந்த செய்தி ஸைதுல்லாகானுக்குத் தெரிந்தது. அவன் முதலில் தன்னைக் காத்துக்கொள்ள வுபாயம் தேடினனே யல்லாமல், சண்டை செய்யும் விஷயமாக வாலோசிக்கவில்லை. பாழுந்தெய்வம் வயிற்றை வைத்திருக்கும் வரையில் படைகளும் படைவீரர்களும் அவனைப்போல வாலோசிக்க முடியாதல்லவா? பொதுவாகச் சொல்வோமானல், யஜமானனைக் காட்டிலும் தளகர்த்தர்கள் தைரியமுள்ளவர்களே. அவர்கள் ஆவேசத்தோடு ஆயுதங்களை யேந்தி எதிரிகளை யெதிர்க்க வந்து நின்றார்கள்.

அப்பொழுது மகம்மதுகான் ஜயஸிங்கு மன்னவனை வணங்கி "அண்ணலே! முதற் சண்டையை எனக்குத் தாருங்கள்! நான் யாசிக்கிறேன்; தாங்கள் சற்றுநேரம் வரையில் இவ்விடத்தில் இருந்து வேடிக்கை பார்க்க வேண்டும்; நான் படைவீரர்களுடன் புறப்பட்டுச் சென்று போரை முடித்து வருகிறேன்" என்றான். ஜயஸிங்கு "மகம்மதுகான்! உனக்குப் பகைவரை வெல்லத் திறமை யில்லை யென்று நான் சொல்ல வரவில்லை; எல்லாச் சிற்றரசர்களும் ஒன்று சேர்ந்திருப்பதனல், உனக்குதவியாக உன்னருகிலிருக்கிறேன்; அஃது உனக்கும் உற்சாகத்தைக் கிளப்பும்; எனக்கும் ஆறுதலை யளிக்கும்" என்று சொன்னன்.

மகம்மதுகான் "அரசர் தலைவரே! அற்பனிலும் அற்பனாகிய ஆறுகாட்டு நவாப்புடன் சண்டை செய்வதற்குத் தங்

களை யழைத்துச் செல்வதை அவமானமாகக் கருதுகிறேன்; தாங்கள் போருக்கு வந்தால் எனக்குப் புகழ் கிடைக்கமாட்டாது; தனித்துச்சென்று சண்டைசெய்ய விரும்புகிறேன்; எனக்கு விடைகொடுத் தனுப்புங்கள்" என்று கேட்டான். ஜயஸிங்கு மன்னவன் "உன் எண்ணம் நிறைவேறட்டும். படைகளைப் பாதுகாத்துக் கொண்டு வெற்றியுடன் திரும்பி வா!" என்று கூறினான். மகம்மதுகான் மட்டற்ற களிப்புடன் மன்னனை வணங்கிக் குதிரை வீரர்களுடன் எதிரிகளை நாடிச்சென்றான்.

சிற்றரசர்கள் மகம்மதுகான் பெருமையையும் வீரத்தையும் ஸைதுல்லாகானுக்குத் தெரியச் சொன்னார்கள். நவாப்பு அவற்றைத் தன் சேனாதிபதி தாவுத்கானுக்குக் கூறினான். தாவுத்கான் படைகளைக கருடவியூகமாக அணிவகுத்து அதன் உடலில் தான் நின்றுகொண்டு எதிரிகளை எதிர்த்து நிற்கலானான். மகம்மதுகான் அதனை யறியாமற் போகவில்லை. அவன் தன்னுடன் வந்த குதிரைப் படைகளை மூன்று பாக மாக்கிச் சத்துரு சைனியத்தின் வலப்புறத்திலும் இடப்புறத்திலுமாக நின்று பிளந்து உட்செல்லும்படி இரண்டு பகுதிகளுக்குக் கட்டளையிட்டுத் தான் மற்றொரு பகுதியுடன் எதிரில் நின்று கருடவியூகத்தின் சிரத்தையும் உடலையும் சேதிக்கத் தொடங்கினான்.

பகைவன் தன்னைவிடத் தந்திரத்தில் மிகுந்தவனென்பதும், போர் புரிவதில் நிபுணனென்பதும் தாவுத்கானுக்கு அப்பொழுதுதான் தெரிந்தது. மகம்மதுகான் செய்த யுக்தியினாலும், வல்லமையினாலும் கருடவியூகம் கால்மணி நேரத்துக்குள் கால்வாங்கத் தொடங்கிற்று.

மகம்மதுகானும் அவன் வீரர்களுமாக வாளை யுருவிக்கொண்டு வீச்சொன்றுக்குப் பத்துப்பன்னிரண்டு விழுக்காடு

வீரர்களின் சிரங்களை வெட்டித் தள்ளி வந்தார்கள். மகம்மது கான் பராக்கிரமத்தை பேச்சாதவரில்லை. அவன் குதிரை கொள்ளி வட்டத்தைப்போலப் பகைவர் நம்விற் புகுந்து சுழன்றது. அது பகைவர்களது கத்தி வெட்டும், ஈட்டியெறிவும், குந்தக் குத்தும் தன்மீதும் தலைவன்மீதும் விழாவண்ணம் குனிந்தும், நிமிர்ந்தும், வளைந்தும், சுழன்றும், பதுங்கியும் பலவிதமாகத் திரிந்து, தேர்ப்பாகன் ரதிகனைக் காப்பது போலக் காத்து, அவனுக்கு வெற்றியை யளிக்கத் தொடங்கிற்று.

எதிரிகளுக்கு மகம்மதுகானது கத்தி வெட்டு தங்கள் புயத்திலும் சிரத்திலும் வந்து விழும்பொழுது மாத்திரம் தெரிகின்றதே யல்லாமல், முன்னர்த் தெரிகின்றதில்லை. சாரிகை திரிவதனால், அவன் 'எங்கிருக்கிறான்? எப்படி யிருக்கிறான்' என்பதையும் கூட அவர்கள் தெரிந்து கொள்ளாமற் போனார்கள். சிற்றரசர்களிற் சிலர் உயிரிழந்தனர்; சிலர் கரமறுந்தனர்; சிலர் யமனென்றனர்; சிலர் பயமென்றனர்; சிலர் இதோ வந்தானென்றனர். சிலர் அதோ போனானென்றனர்; சிலர் ஐயோ! ஐயோ! வென்றனர்; சிலர் தண்ணீர்! தண்ணீ. ரென்றனர்.

தாவுத்கான் மகம்மதுகானைக் கொல்லப் படைகளை மேலும் மேலும் அனுப்பினபடியே யிருந்தான். வெள்ளம் அதிகமாக வந்தாலும் அதனை மிஞ்சவிடாமலடக்கி, மேலேயெழும்புகின்ற பெருங்கடல்போல, எதிர்த்து வந்த வீரர்களில் எவரும் தப்பிச் செல்லாதபடி மகம்மது கானும் அவன் வீரர்களுமாக வளைந்து ஒரு மணி சாவகாசத்துக்குள் கொன்று குவித்துவிட்டார்கள். தானனுப்பின அத்தனை வீரர்களும் ஹதமானவற்றைக் கானும்பொழுது தாவுத்கானுக்குப் பயமுண்டாயிற்று. அவன் பிரமை கொண்

டவன் போலச் செய்வது தெரியாமல் திகைக்கத் தொடங்கி னான். நவாப்புவின் படைகள் புலிகளாற் றுரத்தப்பட்ட மான் கூட்டங்கள் போல ஒருவர் போன வழி யொருவர் போகாமல் தலைவிரி கோலமாக உயிர் தப்பினாற் போது மென்று ஓடத் தொடங்கினார்கள்.

மகம்மதுகான் அவர்கள் செய்கையை யறிந்து 'தாவுத் கானும் நவாப்புவும் தப்பிததுக் கொண்டார்கள்; அவர்க ளைக் கண்டுபிடித்துக் கொன்று வாருங்கள்' என்று தனது படைவீரர்களுக்குப் பகர்ந்தான். அவர்கள் 'தாவுத்கான் எங்கே? நவாப்பு எங்கே? பிடியுங்கள்! அடியுங்கள்! வெட் டுங்கள்! குத்துங்கள்'! என்று கூச்சலிட்டுக் கொண்டு குதி ரைகளை நடத்தினார்கள். ஸைதுல்லாகான் ஒரு சாதாரண வீரன் போல வுடைபுனைந்து அங்கிருந்த ஒரு புதரிற் சென்று ஒளிந்துகொண்டுவிட்டான். தாவுத்கான், தானும் பிணங்களுடன் பிணங்களாக இரணகளத்திற் படுத்து மறைந் தான். திருவண்ணாமலைக்குத் தலைவனாகிய சுபாங்கனென்பவன் நவாப்புவுக்கு அந்தரங்க நண்பன். அவனது கோளுரைக ளாற்றான் ஸைதுல்லாகான் ஜயஸிங்கு மன்னவனைப் பகைக் கத் தொடங்கினான். சுபாங்கனைத் தற்செயலாகத் தூரத் திற் கண்டதும் மகம்மதுகானுக்கு அளவுகடந்த கோபமுண் டாயிற்று. அவ்வீரனை வென்று புகழ்பெற வேண்டுமென்று தனது குதிரையைத் தட்டிவிட்டான்.

அது தலைவன் குறிப்பறிந்து சுபாங்கன் சமீபத்தை ய டைந்தது. அம்மன்னவன் ஒரு பெரிய யானையின் பிடரியில் அமர்ந்திருந்தான். மகம்மதுகான் வாளை யுருவிக்கொண்டு மிகவும் சீக்கிரமாக அவன் மீது பாய்ந்தான். அவ்வளவுதான் றாமதம்; அந்த விநாடியிலேயே சுபாங்கன் வலக்கர மறுப் புண்டு நிலத்தில் விழுந்து துடித்தது. உடனே அவ்வரசன்

இடக்கரத்தினால் மகம்மதுகானுக்குச் சலாம் செய்து 'என்னை விட்டு விடுங்கள்! நான் ஊரை நோக்கியோடிப்போகிறேன்! உங்களுக்குக் கோடி புண்ணியமுண்டு' என்று பல்லைக்காட்டிக் கெஞ்சினான். மகம்மதுகான் 'சீ! வெட்கம் கெட்டவனே! நீ தேசத்துரோகி! உன்னை உயிருடன் விடலாகாது; பாரத யுத்தத்தைச் சகுனி உண்டுபண்ணினது போல, நீ இந்தச் சண்டையை உண்டு பண்ணி யிருக்கிறாய்; நேற்றுக்கூட எங்கள் கிராமங்களிற் புகுந்து பெண்களை வருந்திப், பொருளையும் பூஷணங்களையும் கொள்ளை கொள்ளச்செய்தனை; உன் குற்றத்துக்கு மரணமே தண்டனை' என்று வாளை யோங்கினான்.

சுபாங்கன் "குற்றத்தை ஒப்புக்கொள்கிறேன்; வலக்கரம் அறுப்புண்டதுவே எனக்குப் போதுமானது; என்னைக் காப்பாற்றுங்கள்! உங்கள் அடைக்கலம்!" என்று கெஞ்சினான். மகம்மதுகான் 'சீ! மானத்தைப் போக்கிக் கொண்டாவது பிராணனைக் காக்க முயல்கிறாய்; இப்படிப்பட்ட சூரனென்று தெரிந்திருந்தால், உனது வலக்கரத்தைக்கூட, வெட்டியிருக்கமாட்டேன்; சீக்கிரம் பிழைத்தோடிப்போ!' என்று சொல்லி அப்பாற்றிரும்பினான். அப்புறம் இரணகளத்தில் அவன் தன்னை எதிர்ப்பவரைக் கண்டிலன். இனிச் சென்று அரசனையாவது காணலாமென்று வெற்றிச்சங்கத்தை முழக்கி நீலவேணியைத்திருப்பினான். அத்துரகம் கனைத்துக்கொண்டு தெற்கு முகமாகச் செல்லத் தொடங்கிற்று.

தாவுத்தான் மகம்மதுகானுக்குப் பயந்து பிணங்களில் மறைந்து கொண்டான் என்று படித்திருக்கிறீர்கள்; அவன் தனக்கு நேர்ந்த அவமானத்துக்கு அறிவு கலங்கி விதியை நொந்துகொண்டிருந்தான். மகம்மதுகான் அவன் படுத்திருக்கும் பக்கமாகவே தற்செயலாகத் திரும்பிச்செல்ல நேர்ந்தது.

அவன் அதனைக்கண்டு மனம் புழுங்கிச் சமயத்தை நழுவவிடாமல் 'இப்பொழுதாவது கடவுளுக்குத் தன்மீது இரக்கமுண்டாகின்றதா வென்பதைப் பரீக்ஷிக்கலாம்; தவறினால், உடனே தற்கொலை புரிந்துகொண்டு உயிரைத் துறக்கலாம்' என்று தீர்மானித்து, அவன் சென்றதுமெழுந்து துப்பாக்கியையெடுத்துப் பகைவன் பிடரிக்குக்குறிபார்த்துச்சுட்டான். அது மிகவும் வேகமாக வந்து அவன் பிடரியிற் பாய்ந்தது. மகம்மதுகான் இரணகளத்தில் உயிருள்ளவர் ஒருவருமில்லாதிருக்கும்பொழுது தன்னை யாவர் சுட்டிருக்கக் கூடுமென்று பின்புறமாகத் திரும்பினான். அப்பொழுது மற்றொரு குண்டு பறந்து வந்து நெற்றியிலுருவிற்று. மகம்மதுகான் அந்தக் கணத்திலேயே அநியாயமாக அவனியில் விழுந்திறந்தான்.

ஆம்; இதற்கென்ன செய்யலாம்? இம மோசத்தொழில் பண்டைக்காலம் தொடங்கி நம் நாட்டில் உள்ளதுதான். மகாபாரதத்தில் அபிமன்யுவின் வதத்தை நினைவிற்குக் கொண்டு வாருங்கள்! தாவுத்கான் செயல் புதியதல்ல வென்பதற்கு அது சமாதானம் சொல்லும்.

உடனே தாவுத்கான் தனது வெற்றிச் சங்கத்தை முழக்கிச் சிங்கநாதம் செய்து படைகளை நாடிச்சென்றான். வெற்றி யொலியைக் கேட்ட மாத்திரத்தில் இறந்தவர்கள் போக உயிருக்குப் பயந்து ஒளிந்து கொண்டிருந்த மன்னவர் யாவரும் பரபரப்புடன் வந்து சேர்ந்தார்கள். தாவுத்தான் வெற்றி அவர்களுக்கு வெளியாயிற்று. அவர்கள் அவன் திறமையைப் பெருமையுடன் சொல்லிக் கொள்ளலானார்கள். சைதுல்லாகான் மகம்மதுகானைக் கொன்றதன் பொருட்டுத் தாவுத்கானுக்கு இரத்தின மாலையொன்றை வெகுமதி யளித்தான்.



# அதிகாரம் 21

## இரண களம்

வெள்ளம் வற்றிப் போயிற்று. தென்கரையிற் றங்கி யிருந்த பதாதிகளும் படைவீரர்களும் வடகரைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் அரசனை வணங்கி 'அண்ணலே! உத்தரவு தாருங்கள்! நாங்கள் சென்று துருக்கன் படைகளைத் தொலைத்து வருகிறோ மென்றார்கள். ஜயஸிங்கு மன்னவன் அவர்களுக்கு மகம்மதுகானும் குதிரைவீரர்களும் சண்டைசெய்யச் சென்றிருப்பதை யறிவித்துச் 'சற்றுப் பொறுத்திருங்கள்! அவர்கள் வந்ததும் அனைவரும் ஒருமிக்கச் சென்று வென்றுவரலாம்' என்று சொல்லிச் சமாதானம் பண்ணினன். சற்றுக்கழித்துப் படைத்தலைவன் திரும்பும் பொழுது முழக்கின வெற்றிச் சங்கம் காதில் விழுந்தது. ஜயஸிங்கு மன்னவன் மகம்மதுகான் வெற்றியுடன் திரும்பி வருகிறானென்று படைவீரர்களுக்குச் சொல்லிச் சந்தோஷப் பட்டான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் தாவுத்கானுடைய சங்கத்தொனி கேட்டது. இரண்டொலிகளும் ஒன்றுக் கொன்று பொருளில் முரண்படுவதனல் அவனுக்கு ஒன்றையும் துணிய முடியவில்லை. அவன் 'உண்மையைத் தெரிந்து வாருங்க' ளென்று எதிரில் இருந்த குதிரை வீரர்களுக்குக் கட்டளை யிட்டான். அவர்கள் காற்றினும் விரைந்து பறந்து சென்றார்கள்.

பின்னர்ப்பகைவர்களின் சந்தோஷத்தைத் தெரிவிக்கின்ற போர்ப் பறைகளுடையவும் வாத்தியங்க ளுடையவுமான முழக்கம் எழுந்தது. அதனைக்கேட்டதும் ஜயஸிங்கு மன்னவனுக்கு அமைதியுண்டாகவில்லை. அவன் 'அனைவரும்

போருக்குப் புறப்படுங்கள்; படைத்தலைவனை அங்குக் கலந்து கொள்ளலாம்' என்று சொல்லிப் பஞ்சகல்யாணியின்மீது தாவினான். படைகள் சிங்கநாதஞ் செய்துகொண்டு எதிரிகளை நோக்கியெழுந்தன. அவர்கள் நடத்தலால், துகள் கிளம்பி வெயில் மறைந்தது. இருள்பரந்தது. அனைவரும் இரணகளத்தை அடைந்தார்கள்.

மகம்மதுகான் படைவீரர்களுக்கு நவாப்புவையும் தாவுத்கானையும் நாடிச் செல்லுங்களென்று முன்னர்க் கட்டளையிட்டது உங்கள் நினைவில் இருக்கலாம். அவர்கள் வேறு வேறு பிரிந்து எதிர்த்து வந்தவர்களைக் கொன்று கொண்டு பகைவர் பாளையத்தில் நுழைந்தார்கள். தாவுத் கான் மோசமும் தங்கள் தலைவன் நாசமும் அவர்களுக்கு அங்கே வெளியாயிற்று. தலைவனையிழந்து திரும்பிச் செல்வதைக் காட்டிலும் சண்டை செய்து ஜயிப்பது அல்லது மடிவது மேலானதென்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டு வீராவேசத்துடன் அகப்பட்டவர்களையெல்லாம் முன்பின் பாராமல் வெட்டிச் சாய்க்கத் தலைப்பட்டார்கள். சண்டையின் உக்கிரத்தைச் சொல்லி முடியாது.

ஜயஸிங்கு மன்னவன் இரணகளத்தைக் கண்டான். அது நிணச்சேறும், பிணக்காடுமாக நிறைந்திருந்தது. மகம்மதுகான் அவ்வளவு சாமர்த்தியமாகச் சண்டை செய்வானென்று அவன் எண்ணியிருக்கவில்லை. உடலழிந்தவர்களும், உறுப்பிழந்தவர்களுமாக எண்ணிறந்த வீரர்கள் அப்படி யப்படியே நிலத்தில் விழுந்து கிடந்தார்கள். அவன் ஆச்சரியக் கடலில் அமிழ்ந்து போனான். அந்தோ! அந்தச் சந்தோஷம் இருந்து அநுபவிப்பதற்கில்லாமற் போயிற்று. சற்றுத் தொலைவில் நீலவேணிக் குதிரை நின்று

கொண்டிருந்தது. மகம்மதுகானுக்கு ஆபத்து நேர்ந்து விட்டதென்பதை அவன் அப்பொழுதே நிச்சயம் செய்துவிட்டான். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. வெறிபிடித்தவன்போல நிமிஷத்துக்குள் அவ்விடத்துக் கோடினுன். உண்மைவெளியாயிற்று. குதிரையை விட்டுக் கீழேயிறங்கி ஐந்தாறு நிமிஷம் வரையில் மகம்மதுகானை வெறிக்க வெறிக்கப் பார்த்தான். நண்பன் பிரிவு அவனுக்கு வெளியில் வருத்தத்தை உண்டு பண்ணவில்லை. கோபத்தை மாத்திரம் கிளப்பிற்று. ஏனென்ருல், அஃது இரணகளம்; இருந்து வருந்துவதற்கு இடமன்று; சமயமும் அன்று; 'அவனை முறைப்படியடக்கம் செய்யுங்கள்' என்று வீரர்களுக்குக் கட்டளையிட்டுக் குதிரைமீதேறி வேகத்துடன் பகைவர்பாளையத்தை நோக்கிப் போனுன். அவன் பின்னர்ப் படைகளும் புரண்டு போயின.

# அதிகாரம் 22

## ஜயஸிங்கின் போரும் தாவுத்கான் மரணமும்

கிரமம் அக்கிரமமென்று உலகத்தில் இரண்டு துறைகளிருக்கின்றன. பெரியவர் கிரமத்தை விரும்புவர். கிரமத்துறைக்குக் கடவுளுலகம் கைகூடும். அக்கிரமத்துறைக்கு அரியநரகம் சொந்தமாகும். அக்கிரமம் செய்கின்றவர்களை அனைவரும் வெறுப்பார்கள். உலகத்தில் அக்கிரமம் அதிகமாகும் சமயங்கள் தோறும் கடவுள் பற்பல அவதாரங்களைச் செய்தும், பற்பல துன்பங்களை யநுபவித்தும் கிரமத்தை நிலைநிறுத்துகிருர். இவற்ருல், கிரமத்தினுயர்வு ஒரு சிறிது வெளியாகலாம்.

ஜயஸிங்கு மன்னவனுக்குத் தாவுத்தான் மோசம்செய்துவென்றது வெளியாயிற்று. அவன் யுகத்தின் முடிவில் உல

கத்தையழிக்கக்கோபிக்கின்ற உருத்திரமூர்த்தி யென்னும்படி நவாப்புவின் பாளையத்தை நோக்கிச்சென்றான். தாவுத்தான் முதலான வீரர்கள் அநுஜ்ஞையறிந்து பரபரப்புடன் படைகளை ஒழுங்கு படுத்தினார்கள். உடனே இருதிறத்து வீரர்களும் கைகலந்து ஒருவரை யொருவர் வெல்ல நின்றார்கள். யானை வீரர்களுடன் யானைவீரர்களும், குதிரை வீரர்களுடன் குதிரைவீரர்களும் பதாதிகளுடன் பதாதிகளுமாக வெதிர்த்தும், வீர வசனங்களை விசேஷமாகப் படித்தும், பற்களை நெறுநெறெனக் கடித்தும், ஒருவரை யொருவர் கிட்டிப் பிடித்தும், ஆயுதங்களினால் உடம்பிலடித்தும் அமர்செய்யத் தொடங்கினார்கள்.

சண்டையின் உக்கிரத்தைச் சொல்லி முடியாது. எங்கு நோக்கினாலும் பிணக்காடும நிணச்சேறும்தான். 'வெட்டு! குத்து! அடி! பிடி! உதை!' யென்ற வீரவொலிகளே மிகுந்தெழுந்தன. யானைகளின் கால்களாற் றுகைப்புண்டார் சிலர். குதிரைகளின் கால்களா லுதையுண்டார் சிலர். வாள்களின் வீச்சினால் வாய்திறந்தார் சிலர். ஆள்களின் நெருக்கலால் அங்கம் சாய்ந்தார் சிலர். உக்கிரமான சண்டை. கோரமான காட்சி. பயங்கரமான விரைச்சல்.

ஏற்கெனவே கோபாவேசம் கொண்டிருப்பவனாகையால், ஜயஸிங்குமன்னவன் தனது பெரியகத்தியை உறையினின்றுமுருவிக் கரகரவென்று சுழற்றி எதிரிகள் நடுவிற் புகுந்து வெட்டத் தொடங்கினான். அவன் வெற்றியைப் புகழ ஒரு வாய் போதாது. எழுதலாமென்றாலும் ஏட்டிலடங்காது. என்னதான் சொல்லலாம்! மகாபாரதத்திற் பதும வியூகத்தைப் பிளந்து கௌரவ சேனைகளைக் கொன்று புகழ் பரப்பின அதிபாலியனான அபிமன்யு வென்ற வீரசிகாமணியையல்லாமல் வேறொருவரையும் உபமானமாக்க முடியவில்லை.

எதிரிகளிற் சிலர் குடர் சரிந்தனர்; சிலர் சிரமறுந்தனர்; சிலர் கரங்குறைந்தனர்; சிலர் தொடைதுணிந்தனர்; சிலர் இடைமுரிந்தனர். வீரர்கள் பல்லைக் கடித்துக்கொண்டும், கண்களை விழித்துக்கொண்டும், வாளைப் பிடித்துக்கொண்டும், உயிர் துடித்துக்கொண்டும் நிலத்தில் விழுந்து புரளத் தொடங்கினார்கள். அவனைக் காட்டிலும் அவன் பஞ்ச கல்யாணியின் பராக்கிரமம் பகரத்தக்கதன்று. அது காலினாற் சிலரையுதைத்தும், வாலினாற் சிலரை யடித்தும், பற்களாற் சிலரைக் கடித்தும், உடலாற் சிலரைத்தள்ளியும், வேகத்தாற் சிலரைவீழ்த்தியும் இரணகளமெங்கும் திரிந்து சுழன்றது.

தாவுத்கானும் நவாப்புவும் படைகளை மேலும் மேலும் அனுப்பின வண்ணமே யிருந்தார்கள். குதிரைச் சண்டை செய்வதில் பாண்டவர்களில் நகுலன் நிகரற்றவனென்று மகா பாரதத்திற் புகழ்ப்பட்டுள்ளது. அவனிலும் உயர்ந்தவரிருப்பதாக நமக்குத் தெரியவில்லை. ஜயஸிங்கு மன்னவனை அந்த நகுலனென்றுதான் சொல்லவேண்டும். ஜயஸிங்கு மன்னவன் போர்புரிகையில் கடவுளாவேசம் அவன்மீது நிறைந்திருந்ததென்று சொல்லலாம். ஏனென்றால், கடவுள் உலக காரியங்களைத் தாமே நேர் நின்று எப்பொழுதும் நடத்துவதில்லை. ஒவ்வொரு சமயத்திலும் ஒவ்வொருவரைக் கொண்டுதான் நடத்திவருகிறார். செய்து முடிப்பதற்கு எவர் யோக்கியதையுள்ளவரென்பதை அவர் அப்பொழு தப்பொழுது தாமே யறிந்து கொள்கிறார். ஜனநாயகத்தின்பொருட்டு இக்காலத்திற் செய்யு மேற்பாடுகளைப் போல 'இவரை யெடுக்கவேண்டும்; அவரை யெடுக்கலாகாதென்று' அவருக்கொருவரும் சிப்பார்சு செய்ய வேண்டாம். பரிதானங்கொடுக்கவும் வேண்டாம். அவர் தமக்கு வேண்டியவர்களைத் தாமே தெரிந்தெடுத்துக் கொள்ளுவார். அவர்களுக்கு அறிவு ஆற்றல் முதலிய வருங்குணங்களை

யளித்து அவர்களை யுலகத்தில் ஒப்புடர்வற்றவர்களாக வாக்கு வார். இன்னும் அவசியமான காலங்களில் தாமே அவர்கள் மீது ஆவேசித்திருந்து அரியகாரியங்களை நிறைவேற்றிக் கொள்வதுமுண்டு.

ஜயஸிங்கு மன்னவன் எண்ணவும் இயம்பவு முடியாத அவ்வளவு பேராற்றலை யுடையவனுகி ரணகளத்திற் றன்னை யெதிர்த்து வந்தவர்களைக் கொன்று யமனுக்கு விருந்து செய்யத்தொடங்கினுன். அந்த விருந்து சாதாரணமாகக் கிடைக்கத் தக்கதன்று. எப்பொழுதோ ஒவ்வொரு சமயங்களிற்றுன் கிடைக்கும். உயிர்களுக்கு இயற்கை செயற்கை யென்று மரணம் இரண்டு வகைப்படும். இயமனுக்கு இயற்கை மரணம் சுவையற்றது. ஏனென்றுல், வயது முதிர்தல், நோயில் நலிதல்,விஷம்பரவுதல் முதலான காரணங்களைக்கொண் டிறப்பது இயற்கை மரணமாகும். ஊன்றின்பவர் இத்தகைய விலங்குகளையும் பறவைகளையும் விரும்பவே மாட்டார்கள். இவ்வித மாமிசங்களிற் சற்றும் சுவை கிடையாதென்பது அவர்களுக்கு நன்றுகத் தெரியும். பலமும் புஷ்டியும் வயதுமுள்ளவர்களாக ஆயிரத்தி லொருவர்கூட விசாரமற் றிறப்பதில்லை. ஆகவே, இயமன் யுத்தத்தை யெதிர்பார்ப்பதில் ஆச்சரியமில்லையல்லவா ? சண்டைதான் அவன் விரும்பக் கூடியது.

சண்டை செய்வதற்குக் குழந்தைகளையும். நோயாளிகளையும், கிழவர்களையும் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். யானை, குதிரை, கோவேறுகழுதை முதலான விலங்கினங்களிலுங்கூட அப்படிப்பட்டவையிரா. சௌரியமான உயிர்; சந்தோஷமான சாவு; சுவைமிகுந்த மாமிசம். இப்படிப்பட்ட விருந்தை அவன் எப்பொழுது காணப்போகிறுன் ? அவனும் அவன் பரிவாரங்களும் ஜயஸிங்கு மன்னவனை வாயாரப் புகழ்ந்து விலாபுடைக்கத் தின்னத் தொடங்கினுர்கள். பிரபல

மான விருந்தொன்றில் முக்கியமானவர் நீங்கலாகச் சம்பந்தமில்லாத சில ஏழை எளியவர்களுக்கும் சாப்பாடு கிடைக்குமல்லவா? அதுபோலப் பருந்து சமுத்ர முதலிய சில பறவையினங்கள் வீரர்களின் மாமிசங்களை விசாரமின்றித் தின்று வானமண்டலத்தில் வட்டமிட்டுத் திரிந்தன. நரிகள் ஊன் தின்றும் உதிரம் பருகியும் வெறிகொண்டு ஊளமிட்டன. பேயினங்கள் உற்சாகத்தோடுலாவிப் பரணிபாடின.

'ஸைதுல்லாகான் எனது வருகையைத் தடுக்க ஏரிகரையை யுடைத்துவிட்டுச் சங்கராபரணி யாற்றில் தண்ணீரைப் பெருக்கினன்; அது வீரர்கள் விரும்பத்தக்கதன்று; நான் யாவரும் விரும்பும்வண்ணம் உயர்ந்த நதியொன்றை உற்பத்தி பண்ணுகிறேன்' என்று ஜயசிங்கு மன்னவன் தனது ஒப்பற்ற சாமர்த்தியத்தினால் அவ்விடத்திலொரு யுத்தநதியை உண்டுபண்ணினன். அந்நதி அதிக பயங்கரமானது. அவ்வாற்றுக்கு மாமிசமும் மஜ்ஜையும் சேறு. உடல் நரம்புகள் நீர்ப்பாம்புகள். எலும்புகளும் தலைமயிர்களும் பாசைகள். சிறு கத்திகளும் பெருங்கத்திகளும் மீனங்கள். தலைப்பாகைகள். நுரைகள் அறுந்துவிழுந்த குதிரைத் தலைகள் நீர்ச்சுழல்கள். தலையில்லாத முண்டங்கள் நீர்மனிதர்கள். பறவைகளின் சத்தங்களும் வீரர்களின் சிங்கநாதங்களும் நீரிரைச்சல்கள். வீரர்களின் தலைகள் தாமரை மலர்கள். ஈட்டிகளும் வேல்களும் கோரைப்பற்கள். யானைத் தலைகள் ஆமைக் கூட்டங்கள். இரத்தப்பெருக்கு நீர்ப்பெருக்கு. தம்பட்டங்கள் தெப்பம். ஏறிச்செல்கின்றவர் பேய்க் கூட்டங்கள். இது நதியின் விவரம்.

நவாப்புவின் பாளையத்தில் இனிச் சண்டைக்கனுப்பப் படைகள் கிடையா. எல்லாப் படைகளும் இயமனுக்கு ஊணவாயின. நவாப்புவுக்கு அது தெரியவில்லை. அவன் 'இருப்

பவர்களுடன் சென்று எதிரியை வென்றுவா'வென்று துரிதப் படுத்துகிறான். படைத்தலைவனுக்குப் பகர முடியவில்லை. பகைவனே பெரிய சிங்கத்தைப்போலப் படைகளைப் பிளந்து கொண்டு இன்னும் எதிர்ப்பவர் எங்கே? எதிர்ப்பவர் எங்கே? யென்று இரைச்சலிட்டு வருகிறான். முன்னணியில் நின்று தாக்கத்தக்க வீரர்கள் எப்பொழுதோ விரைந்து வீரச்சுவர்க்கத்துக்கு விரைந்து போய் விட்டார்கள். தொகையிலும் திறமையிலுந்தாழ்ந்த சிலரை வைத்துக்கொண்டு பெரிய பகைவனையெதிர்ப்பதுவீணனகாரியம். அதனைஸைதுல்லாகானுக்கு க்குறிப்பாகவும் அவன் தெரிவித்திருக்கிறான். யஜமானன் அறிவற்றவனுயின் அவன் என்ன செய்யலாம்? யஜமானனுக்குச் சமயம் தெரிவதில்லை. மூர்க்ககுணமும் பிடிவாதமுந்தான் அவனிடத்தில் முக்கியமாக விருக்கின்றன. இனி உடம்பில் உயிருள்ளவரையிலும் எதிர்த்து நிற்கவேண்டியதுதான். ஆறிலுஞ் சாவு; நூறிலுஞ் சாவு.

தாவுத்கான் சூது வஞ்சனை முதலியவற்றிற் கைதேர்ந்தவனென்று உங்களுக்கு நன்றாகத் தெரியும். அந்தச் சமயத்திலும் அவனுக்குத் தைரியம் தொலைந்து போகவில்லை. அவன் மோசச் செயல் சற்று முன்னர்ச் சரியானபடி பலன் தந்திருக்கின்றது. மகம்மதுகானை மாய்த்திருக்கிறான். அப்பொழுது அநுக்கிரகஞ் செய்த கடவுள் இரணகளத்திற் சண்டைசெய்து இறந்துபோகவில்லை. உயிருடன் இருந்து வருகிறார்.

"உறுதி பயப்பக் கடைபோகா வேனும்,
இறுவரை காறம் முயல்ப—இறும் உயிர்க்கும்,
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால்; அல்லனபோல்
ஆவனவு முண்டு சில."

குமரகுருபரர்.

தைரியத்தைக் கொண்டு கடமையைச் செய்யத் தொடங்கினால் அவர் ஏதேனும் தந்திரத்தைத் தோற்றுவித்து வெற்றியை யளிக்கலாம்.

தாவுத்கான் ஜயஸிங்கு மன்னவனைத் தைரியத்துடன் எதிர்த்து நிற்கலானான். தனதுயிர்நண்பன் மகம்மதுகானை மோசஞ் செய்துகொன்ற மகாபாதகனென்பதை ஜயஸிங்கு மன்னவன் தெரிந்துகொண்டு தனது குதிரையை அவனுக்கு நேராக நடத்தினான். தாவுத்கானும் படைவீரர்களும் உக்கிரமாகத் தாக்கத் தொடங்கினார்கள். ஆனால், அந்தத் தாக்குதல் பனிப்படலம்போல அரைநாழிகைக்குள் ஹதமாய் விட்டது. குற்றுயிர்களாகவும் பிணங்களாகவும் படைகள் யாவும் மடிந்தன. அப்புறம் தாவுத்கான் ஜயஸிங்கு மன்னவன் றாக்குதலை எதிர்த்து நிற்பதெங்ஙனம்? ஐந்தாறு ஜமீஷங்கள் கூட அவனைச் சமாளிக்க முடியவில்லை. அவன் எந்தப்புறத்தில் ஓடியொளியலாமென்று நாற்புறமும் நோக்கத் தொடங்கினான். அவன் நோக்குவது நியாயமானதுதான். உயிர் பெறுவதற்கரியது. அதனிலும் மனிதவுயிர். இன்னும் படைத்தலைவன். எவனுக்குத்தான் இறக்க மனம்வரும். ஏதேனும் உபாயஞ் செய்து இப்பொழுது தப்பித்துக்கொண்டால், பிறிதொரு சமயம் பார்த்துக்கொள்ளலாம். அவன் உயிர் பிழைக்க உபாயமென்னவென் றுன்னினான். ஜயஸிங்கு மன்னவன் புறங்காட்டிப் போகின்றவனைப் போரிற் கொல்லமாட்டானென்பது நிச்சயம். அதனால் எப்படி யோடலாமென்று யோசிக்கலானான்.

ஜயஸிங்கு மன்னவன் அதனை வேறுவிதமாக நினைத்துக்கொண்டுவிட்டான். "துணைப்படைகள் வருகின்றனவாவென்று திரும்பிப் பார்க்கிறான் போலும்; அதற்கு இடந்தரலாகாது; அவனும் குதிரையி லிருக்கிறான்; நாமும் குதிரையி

லிருக்கிறோம்; இப்பொழுது பயன்படுமாயுதம் கத்தியும் கேடயமுந்தான்; இரண்டும் இருவரிடத்திலும் இருக்கின்றது. எதிர்த்துக் கொல்வது யுத்ததருமமாகும்" என்பதுதான். அதனால் தாவுத்தான் சிரத்தை வாள்வீச்சொன்றினால் நிலத்திற் புரள வுருட்டினான். தலையற்றவுடலைச் சுமந்துகொண்டு அவன் குதிரை கொஞ்சம் தொலைவுவரையிற் சென்றது. அப்புறம் அம்முண்டமும் இளைப்பாறுதலை விரும்பிக் கீழேவிழுந்து விட்டது.



## அதிகாரம் 23



### இரண்டாவது தூது

படைத்தலைவன் மாண்டது ஸைதுல்லாகானுக்குத் தெரிந்தது. அவனுக்குப் பாதியுயிர் அப்பொழுதே போய்விட்டது. இருக்கும் படைகளை யொருமிக்கத் திரட்டினான். ஐந்திலொருபாகமும் இல்லை. சிற்றரசர்களை நோக்கினான். இருபது இருபத்திரண்டு பெயர்கள்தா மிருந்தார்கள். அவன் சித்திரப் பதுமைபோலச் செய்வது தெரியாமற் றியங்கினான். முடிவில் என்ன செய்யலாமென்று இருப்பவர்களை ஆலோசனை கேட்டான். அவர்கள் "அரைநாள் யுத்தத்திலேயே படைகள் யாவும் அலங்கோலமாகியழிந்தன; படைத்தலைவனும் படைவீரர்களும் தொலைந்துபோனார்கள்; பிறிதொருசமயம் பார்த்துக் கொள்ளலாம்; சண்டை நடுவிற் சமாதானத்தை விரும்புவது சகஜமானதுதான்" என்று சொன்னார்கள். ஸைதுல்லாகானுக்கு உடல் நடுங்கிற்று; ஊக்கம் குறைந்தது; பயம் மூண்டது. உடனே தோன்றமல்லனை யழைத்து மிகவும் இரகசியமாக என்னவோ சொல்லி யனுப்பினான்.

சமாதானத்தைச் சகலரும் விரும்புவர். நாட்டின் வளத்தைக் கொழிக்கச்செய்வது சமாதானம்தான். அஃது அனைவருக்கும் ஆறுதலை யளிக்கும். ஆச்சிரம தருமங்களைப் பெருக்கும். சமபப்பயிர்களை வளர்க்கும். பொது நன்மைப் பாதையைத் திறக்கும். ஒற்றுமைத் தோட்டத்தை யுயர்த்தும். சிற்பக் கலைகளைப் பயிற்றும். சமாதான மில்லாத காலங்களில் இவற்றை யேட்டில்தான் காணலாம். பெருந்தன்மையும் பேரறிவுமுள்ள வரசர்கள் சமாதானத்தை விரும்புவார்கள். பேராசைக்கும் பொறாமைக்கும் அடிமையான புல்லர்கள் ஆபத்துக் காலத்திலன்றி அதனை விரும்பமாட்டார்கள்.

"பெற்றார், பிறந்தார், பெருநாட்டார், பேருலகில்
உற்றார், உகந்தாரென, வேண்டார்;—மற்றோர்
இரணம் கொடுத்தால் இடுவர்; இடாரே
சரணம் கொடுத்தாலும் தான்." ஒளவையார்.

இஃதவர்களிலக்கணம்.

ஜயஸிங்கு மன்னவனும் படைகளும் நவாப்பு எங்கே யெங்கே யென்று சிங்கநாதஞ் செய்துகொண்டு வரும் வழியிற் சில குதிரை வீரர்கள் அவர்களுக கெதிரில் வெள்ளைக் கொடியை விரித்துக்கொண்டு வந்தார்கள்.

ஜயஸிங்கு மன்னவன் குதிரைமீதி லிருந்தவண்ணம் வாளின் முனையைத் தன்னொரு பாதத்திலூன்றிக்கொண்டு பற்களை நெறுநெறெனக் கடித்துக் கோபத்துடன் நின்றான். தோன்றமல்லன் தன் குதிரையை நடத்திக்கொண்டு முன்னர் வந்து நின்று வந்தனஞ் செய்தான்.

ஜயஸிங்கு:—தூதரே! என்ன விசேஷம்?

தோன்றமல்லன்:—நவாப்பு ஸைதுல்லாகானவர்கள் தங்களைக் கண்டு வரும்படி அனுப்பியிருக்கிறார்.

ஜயஸிங்கு:—ஏன்?

தோன்றமல்லன்:—அவர் சமாதானத்தை விரும்புகிறார்.

ஜயஸிங்கு:—நான் சண்டை தொடங்கவில்லையே?

தோன்றமல்லன்:—தெரியாமற் றொடங்கிவிட்டதற்காகவே என்னையனுப்பினார்.

ஜயஸிங்கு:—எப்படி ?

தோன்றமல்லன்:—பகுதி வசூலிக்கும் நிமித்தம் போருக்கு வந்தது; இப்பொழுது பகுதி வேண்டாம்; அவர் தம் படைகளை யழைத்துக்கொண்டு திரும்பிப் போகிறார்.

ஜயஸிங்கு:—முன்னர் எப்பொழுதாவது வசூலித்திருந்தால்தானே இப்பொழுது வேண்டாமென்பதற்கு? உக்கிரமாகச் சண்டை நடந்துகொண்டிருக்கும்பொழுது ஊருக்குச் செல்ல விடுகின்றவர்யார்? முடியாத காரியம்.

தோன்றமல்லன்:—சண்டை நடுவிற் சமாதானத்தை விரும்புவது தரணிபர்களுக்குச் சகஜம் தானே?

ஜயஸிங்கு:—இருக்கலாம்; என் அரிய படைத்தலைவனை மோசஞ்செய்து கொன்றதற்குச் சமாதானமென்ன?

தோன்றமல்லன்:—தாவுத்கான் இறந்துபோய் விட்டான்; அவன் செய்த அடாச்செயலினிமித்தம் இருபது பாளையப்பட்டுகளைத் தங்களுக்கு ஸைதுல்லாகான் இனமாக விட்டுவிடுகிறார்; அவற்றின் பகுதிகளைத் தாங்களே எப்பொழுதும் வசூலித்துக் கொள்ளலாம்.

ஜயஸிங்கு:—தூதரே! இருபதல்ல; உங்களரசரே வந்து எனக்கூழியஞ் செய்ய ஒப்புக்கொண்டாலும், என் அரிய படைத்தலைவனை மறுபடியும் பார்க்கமுடியுமா? அல்லது உங்கள் பகுதிப்பணம் அவனாத்துமாவுக்கு ஆறுதலை யுண்டுபண்ணுமா? நான் சண்டையை விரும்பி நிற்கிறேன்.

தோன்றமல்லன்:—நவாப்பு இறந்துபோனால் தங்கள் மகிமைதான் ஆத்மாவுக்கு ஆறுதலுண்டாகும் போலும்; பெரும்பகை பாராட்டுவது பெரியவர் இலக்கணமல்லவே?

ஜயஸிங்கு:—நல்லதூதரே! உண்மையைச் சொல்லுங்கள்! துஷ்டர்களைத் தொலைப்பது தருமநீதி; அவராகவே வலுவில் வந்து சண்டை தொடங்கியிருக்கும்பொழுது விட்டுவிடலாகாது; இன்னமும் ஒன்று சொல்கிறேன்; இந்தச் சமாதானம் மனவமைதி கொண்டதன்று; இப்பொழுது விதியில்லாமல் ஒப்புக்கொள்கிறார்; இரண்டொரு வருஷங்கள் கழிந்த பிற்பாடு இன்னொரு தடவை வந்து சண்டை செய்யத்தொடங்குவார்; பெருந்தன்மையானவர்களுக்குச் சமாதானம் சிறந்தது; உங்களரசரிடத்தில் அதனைக் காணமுடியுமா? அவருடன் ஆயுள்வரையிலும் அல்லற்படுவது அழகன்று; அறிவன்று; ஆண்மையுமன்று; சீக்கிரஞ்சென்று சண்டைக்கு வரச் சொல்லுங்கள்.

தோன்றமல்லன்:—பெருந்தன்மை மிக்க பிரபுவே! குற்றமற்றவர்களை உலகத்திற் காண்பதரிது. கடவுள் அருள்முகத்தை நினைந்தாவது சற்று யோசித்துப் பாருங்கள்!

ஜயஸிங்கு:—சண்டைக்குப் புறப்படுகையிலேயே யோசித்துத் தீர்மானித்துக்கொண்டுவிட்டேன். இதுதான்முடிவு.

தோன்றமல்லன்:—"பிரபுக்களின் சித்தம் அப்படியிருந்தால் நான் என்ன சொல்லப்போகிறேன்; வந்தனம்; சென்று வருகிறேன்" என்று சொல்லி வீரர்களுடன் திரும்பினான்.



# அதிகாரம் 24

## ஜயஸிங்கும் போலிநவாப்பும்

நவாப்பு ஸைதுல்லாகானுக்கு ஜயஸிங்கு மன்னவன் தீர்மானம் தெரிந்தது. இனி விதியில்லை. சண்டைக்குத் துணியவேண்டியதுதான். இருக்கின்றவர்களை ஒருவிதமாக வொழுங்கு படுத்தினான். சிற்றரசர்களுக்குப் பலவிதமான ஆசை வார்த்தைகளைச் சொல்லிச் சமாதானம் செய்தான். அவர்கள் மறுபடியும் யுத்தத்திற்கு ஆயத்தமானார்கள். அதற்குள் ஜயஸிங்கு மன்னவன் தனது படைகளுடன் உக்கிரமாகவந்து தாக்கினான். இருதிறத்து வீரர்களுக்கும் இனியில்லையென்னும்படியான சண்டை நடந்தது. குதிரைகளின் கனைப்பும், யானைகளின் பிளிறலும், வீரர்களின் ஆர்ப்பும் ஒன்றுசேர்ந்து வானத்திற் பரந்தன. ஆயுதங்கள் ஒன்றோடொன்று தாக்குதலாற் 'கணீர்! கணீ!' ரென்று சத்தமுண்டாயிற்று.

செஞ்சிக்கரசன் வலக்கரத்தில் வாளையும், இடக்கரத்திற் கேடயத்தையும் தாங்கினான். தன்னை யெதிர்க்கின்ற படைவீரர்களை அவன் இலக்ஷ்யம் பண்ணவில்லை. 'அவர்கள் வயிற்றின் பொருட்டு வந்திருக்கின்றவர்கள். அவர்களைக் கொல்வதிற் பயன் கிடையாது. பேராசையும் பொறாமையுங் கொண்ட துருக்கனையும், அவனுக்குத் துணைவந்த சிற்றரசர்களையும்தான் தொலைக்க வேண்டு'மென்று அவர்கள்மீது தாவினான். அவ்வரசர்களுக்கு அச்சம் பெரியதாயிற்று. ஆண்மையடங்கிப்போயிற்று. 'அகப்பட்டுக் கொண்டவனுக்கு அஷ்டமத்திற் சனி; ஓடிப்போனவனுக்கு ஒன்பதிற் குரு.' இரணகளத்தில் முன்னின்றவர்கள் உயிர் துறந்தார்கள். பின்னின்றவர்கள் தங்கள் குதிரைகளை முடுக்கி மூலைக் கொருவராக

மறைந்து போனார்கள். அவர்களிருந்த விடங்களில் படைத்தலைவர்கள் விதியில்லாமல் வந்து நின்றார்கள்.

ஜயஸிங்கு மன்னவன் ஆவேசங் கொண்டவன்போலத் தன்றிறமையாலும், குதிரையின் சாமர்த்தியத்தாலும், அவர்களி லொருவுரையும் தப்பவிடாமல் மடக்கிச் சிரங்களையும், கரங்களையும், உரங்களையும், வெட்டியும், துணித்தும், பிளந்தும் வீழ்த்தி, நிலத்தை இரத்தவெள்ள மாக்கினான். அரைமணி சாவகாசத்திற்குள் அந்தப் படைகளிற் பெரும்பாகமும் நிலத்திற் படுத்து இளைப்பாறத் தொடங்கின. நடத்துவாரில்லாத குதிரைகளும், அடக்குவாரில்லாத யானைகளும் அச்சங் கொண்டு அங்குமிங்குமாக வோடி இரணகளத்தில் விழுந்து துடிக்கின்ற வீரர்களை மிதித்துக் கொன்றன.

ஜயஸிங்கு மன்னவன் தன்னை யெதிர்க்கின்றவ ரில்லாமல் யுத்தகளத்தைச் சுற்றிவரும்பொழுது நெடுந்தூரத்தில் யானையின்மீ துட்கார்ந்திருந்த நவாப்புவைக் கண்டான். உடனே தனது பஞ்சகல்யாணியைத் தட்டி நிமிஷத்துக்குள் அவ்விடத்தையடைந்து முதல் வீச்சிற் பாகனை வெட்டித் தள்ளினான். இரண்டாவது வீச்சில் நவாப்புவின் ஒரு கரம் அறுபட்டு நிலத்திற்புரண்டது. அவன் அப்படியே குப்புறவிழுந்து வணங்கி "ஐயா! என்னை விட்டு விடுங்கள்! நான் நவாப்பு வல்லேன்; அவர் எனதுடைகளைப் புனைந்து எவ்விடத்திற்கோ சென்றிருக்கிறார்; அவர் கட்டளைப்படி அவருடைகளையும் அணிகளையும் புனைந்து அவர் யானையின்மீது நான் இருந்து வருகிறேன்; இஃது எவருக்குந்தெரியாது; சொல்லவேண்டாமென்றும் எச்சரித்துப் போயினார்; யஜமானர் கட்டளை எதுவாயிருந்தாலும் ஏற்றுக்கொள்ள வேண்டுமல்லவா?" என்று வருந்திக் கூறினான்.

அதனைக் கேட்ட மாத்திரத்திற் ஜயஸிங்கு மன்னவன் தான் மிகவும் கொடுமை செய்தவன்போல நாணி "நான் என்னசெய்யட்டும்? இஃதுனது வேஷத்தினால் வந்தகேடு. ஓடிப் போய்ப் பிழை" என்று சொன்னான். அவன் அரசனை வாழ்த்திக்கொண்டு அப்பொழுதே மறைந்து போனான்.



## அதிகாரம் 25



### ஜயஸிங்கின் மரணம்

"வீறின்மையின் விலங்காம்என மதவேழமு மெறியான்;
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்;
மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான்;
ஆறன்மையின் முதியாரையு மெறியான் அயில் உழவன்."

திருத்தக்கதேவர்.

வெற்றிகொள்ளவேண்டுமென்ற வெண்ணம் ஜயஸிங்கு மன்னவனை விட்டுப் பறந்தது. அவனுக்கு வெறுப்பு மேலிட்டது. இப்படியும் ஒரு மனிதனிருப்பானாவென்று அவன் ஸைதுல்லாகானைப் பற்றிச் சிந்தை செய்யத் தொடங்கினான். அவன் "வெட்கம் கெட்டவனே! உன்னை வெற்றி வீரனென்று கருதியல்லவோ யுத்தத்துக்கு வந்தேன்; அரசர்களையும் அவர்கள் படைகளையு மழைத்துவந்து இங்கு அநியாயமாகத் தொலைத்து நீ மாத்திரம் தப்பித்துக் கொண்டு போயினை; வீரமற்றவனே! நான் பரக்ஸியர் பிரதிநிதியென்று சொல்லிக்கொள்கிறாயே? உனக்கு மானமில்லையா? ஆயிரக்கணக்கான உயிர்களை அந்தோ! அரை நாழிகையில் நாசஞ் செய்துவிட்டாயே! கடவுள் சந்நிதானத்தில் உன்மீது குற்றஞ் சுமருங்கொழுது என்ன சமாதானஞ் சொல்லித் தப்பப் போகிறாய்?

"மோசமுள்ளவனே! உன்னிடத்தில் வயிறு வளர்க்க வந்தவனுக்கு உன் வேஷத்தைக்கொடுத்துக் கெடுத்தனே; ஆறுநாட்டுக்குச்சென்று உன் னரண்மனைப் பெண்கள் முகத்தில் எப்படி விழிக்கப் போகிறாய்? மனிதப் பதரே! உன்னைக் கொல்வதிற் பயன் யாது? ஓடியொளிந்தாவது உயிர் பிழைக்க விரும்புகின்றனை; உன்னொழுக்கத்துக்கு ஒருபொழுதும் தண்டனை யடையாதிராய்; ஒரு சமயம் இந்தச் சண்டையில் உன்னைக் காப்பாற்றக் கடவுளுக்குக் கருத்திருக்கலாம்; உன் போன்றவர்களைக்கொண்டுதான் அவர் தமது உலக ரக்ஷணத்தை நிறைவேற்றவேண்டும்; தொலை; அநுபவிக்கிறாய்" என்று வெறுத்துச் சொல்லிக்கொண்டான். உடனே அவனுக்கு மகம்மதுகான் நினைவுண்டாயிற்று.

பின்னர் அவன் "மகம்மதுகான்! நவாப்புவைக் கொன்று உன்னைக் காணலாமென்றிருந்தேன்; அவன் உயிருக்குப் பயந்து ஒளிந்துகொண்டு விட்டான்; இனியவனைத் தேடுவதிற் பயன்கிடையாது; நண்பனே! சற்றுப் பொறுத்துக்கொள்! இதோ வந்து சேருகிறேன்" என்று சொல்லிக் குதிரையை விட்டுக் கீழே யிறங்கிக "கல்யாணி! நான் நண்பனைக் காணப் போகிறேன்; நீ ஊருக்குச் செல்கின்றனையா?" வென்று கேட்டான். அத்துரகம் தனது முன்னங் கால்களை மடித்துக் கொண்டு அவன் பாதத்தில் விழுந்து தான் இறக்கச் சித்தமாயிருப்பதைத் தெரிவித்தது. உடனே ஜயஸிங்கு மன்னவன் கடவுளைத் தியானம்செய்து அதனை இருதுண்டமாக வெட்டி யெறிந்துவிட்டான்.

அதன் பின்னர் நண்பன் பிரிவு அதிகமாக வந்து வருத்தத் தொடங்கிற்று. அவன் "சேஷசயனரே இதுவரையில் என் கடமையை நான் செய்து முடித்தேன்; உலகமும் உலகப் பொருள்களும் எனக்கினி யின்பஞ் செய்யமாட்டா; நண்பன்

சென்றநெறியை நானும் நாடிச் செல்கிறேன்; குதிரையையும் அனுப்பிவிட்டேன்; சுத்தவீரர்களுக்குத் திறந்திருக்கின்ற வுலகம் எனக்கும் சொந்தமாகட்டும்; நண்பன் பிரிவு என்னை வருத்துகின்றது; உலகத்திலிருந்தால் அஃது ஒவ்வொரு நிமிஷமும் என் முன்வந்து நின்று வாதைப் படுத்தத் தொடங்கும்; விசாரமற்ற வாழ்வு என்னை விட்டுத் தொலைந்தது; என் தொழில்களில் ஏதேனும் அறியாமையினல் நேர்ந்த பிழைகளைச் சருவக்ஞராகிய தாங்கள் பொறுத்து அநுக்கிரகஞ் செய்யுங்கள்! தங்கள் பள்ளிக்கொண்ட திருக் கோலத்தினும் ஹிரண்யவதம் இராவண வதம் கம்ஸவத முதலியவற்றைச் செய்யவெடுத்த திருக் கோலத்திற் சுவையதிகம்; இது கேவலம் சாந்தம்; வீரர்கள் விரும்பத் தக்கதன்று; வீரச் சுவர்க்கத்தில் துஷ்ட நிக்ரகஞ் செய்யவெடுத்த வீரத்திருக் கோலமல்லவா விளங்கிவருகின்றது; பரம்பொருளே!

"கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்துருகி
நில்லாப் பிழையும், நினையாப் பிழையும், நின் அஞ்செழுத்தைச்
சொல்லாப் பிழையும், துதியாப் பிழையும், தொழாப் பிழையும்,
எல்லாப் பிழையும், பொறுத்தருள் வாய் கச்சி யேகம்பனே."

பட்டினத்தடிகள்.

"வெங்கண் திண் களிறடர்த்தாய்; வித்துவக்கோட் டம்மானே!
எங்குப்போய் உய்கேன்உன்; னிணையடியே அடையல்லால்,
எங்கும்போய்க் கரைகாணது எறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே."

குலசேகரர்.

"தர்மஸ்வரூபரே! அதோ விமானம் வருகின்றது; வீரர்களும் தெய்வப் பெண்களுமாக அதனைச் சூழ்ந்திருக்கின்றனர். ஆ! என்ன வாச்சரியம்! எனதுயிர்நண்பன் மகம்மதுகான் அதனை நடத்திவருகிறன்; அன்புள்ளவரே! அருள்

கொண்டவரே! அழிவற்றவரே! சென்றுவருகிறேன்; அநுக்கிரகம் செய்யுங்கள்" என்று சொல்லித் தனது வெற்றிவாளினுல் குத்திக்கொண்டிறந்தான். அந்தோ! என்ன வீரம்! என்ன நட்பு! என்ன வொழுக்கம்!

ஜயஸிங்கு மன்னவன் இறந்தது அவன் படைவீரர்களுக்குத் தெரிந்தது. பகைவன் படைகளில் மூலைக்கொருவராகப் புகுந்து யுத்தம் செய்து கொண்டிருந்த இராஜ குடும்பத்தைச் சார்ந்த எல்லா வீரர்களும் தங்கள் அரசனிறந்தவிடத்தில் வந்து திரண்டார்கள். அவர்கள் இறந்துபோன தங்கள் அரசனையும், அவன் பஞ்சகல்யாணியையும் ஐந்தாறு நிமிஷங்கள் வரையில் வெறிக்க வெறிக்கப் பார்த்து நின்றார்கள். அப்புறம் அவர்கள் துக்கத்தினுற் கண்ணீரும் உதிர்க்கவில்லை; கதறியும் அழவில்லை. உடனே தங்கள் தங்கள் வாளாயுதங்களினுல் அரசனைப்போலவே அனைவரும் குத்திக்கொண்டிறந்து போனுர்கள். என்ன வொற்றுமை! என்ன வீரத்தனம்! என்ன ராஜபக்தி!

## அதிகாரம் 26

### செஞ்சியினழிவு

ஜயஸிங்கு மன்னவன் மரணம் ஸைதுல்லாகானுக்குத் தெரிந்தது. அவன் உடனே அங்குவந்து பார்த்தான். பிரமைகொண்டு போனுன். மகாவஞ்சகனுகிய அவன் மனமும் கலங்கிப் போயிற்று. அவன் "சூரர்சிகாமணி! தென்னிந்தியாவுக்குத் திலகம் போன்று விளங்கின நீ, நான் ஒளித்துக் கொண்டதன் காரணமாக ரணகளத்தில் தற்கொலை செய்து கொண்டனையென்றுல், நான் மாத்திரம் எத்தனைநாள் உலகத்

திலிருந்து அரசாளப் போகிறேன். உனது பழிப்பற்ற பராக்கிரமத்தைக் கொடுமையும் கபடமுங் கொண்ட எனது பொய்க்காவினுற் புகழ நாணுகிறேன். நான் அதிக பாபஞ் செய்தவன். கடவுளுலகம் உனக்கு அடையு மரண்மனையாகும்" என்று சொல்லி 'அவனையும் மற்றவர்களையும் அரண்மனைக்கெடுத்துச் சென்று அருமறை யொழுங்கின் வண்ணம் அடக்கஞ் செய்யுங்கள்.' என்று அங்கிருந்தவர்களுக்குக் கட்டளையிட்டுத் திரும்பினான். அதுவரையில் அவனை ஆவேசித்திருந்த ஸ்மசான வைராக்கியமும் அப்பொழுதே மறைந்து தொலைந்தது. அப்புறம் அவன் பழைய வைதுல்லாகானாகவே விளங்கினான். நவாப்பின் பாளையத்தில் இறந்தவர்கள் யாவரும் பிராணபயம் மாத்திரம் நீங்கினார்களே யல்லாமல், ஜயஸிங்குமன்னவன் முடிவின் நிமித்தமுண்டான அழுகை நீங்கினாரில்லை.

இரணகளத்தின் செய்தி செஞ்சிக்கோட்டைக் கெட்டிற்று. அப்பட்டண வாசிகள் அரசன் வீர மரணத்துக்கு அடைந்த வருத்தத்தைச் சொல்லிமுடியாது. படிக்கின்ற நமக்கே துயரமதிகரிக்கின்றது. காதலன் மரித்ததைப் பட்டமஹிஷி பத்மினிபாய் அறிந்தாள். அவள் மனத்தின் றன்மை நமக்குத் தெரியாது. அவள் செயல் மாத்திரம் சுத்த வீராங்கனை யென்று வெளிப் படுத்துகின்றது. எப்படியென்றால், அவள் சாதாரணமான உலகத்துப் பெண்களைப்போல வழுதும், புரண்டும், தலைமயிரை விரித்தும், பிய்த்தும், மார்பிலறைந்துங்கொண்டும் வருந்தவில்லை. அவள் பேசிய வார்த்தைகள் இரண்டொன்றுதான். "ஆ என்னுயிரே! தங்கள் மரணத்தைக் கேட்ட பின்னர் அடியாள் யாவருக்காக உலகத்திலிருக்கவேண்டும்; என்னுடல் தங்களுக்காகவன்றோ இதுவரையிற் போஷிக்கப்பட்டு வந்திருக்கின்றது; தாங்களில்லை

யென்றால், அஃது இருந்து பயன் யாது; நானும் வந்துவிட்டேன்; அங்காவது தங்கள் இணையற்ற திருவுருவத்தைச் சம்பூரணமாகத் தரிசித்துக் கொண்டு பிரியாதிருக்கலா மன்றோ? இனிக்கணமும் இரேன்; இரேன்" என்பனவேயாகும். அறுதியில் "ஆ! உயிரே! உயிரே!! உயிரே!!!" யென்று மும்முறை புகன்றதும், அடுத்த நிமிஷத்தில் அவளுயிர் பிரிந்துபோயிற்று. ஆ! என்னவன்பு! என்ன வன்பு!! இவ்வாச்சரியத்துடன் இரணகளத்தில் உயிர் நீங்கின அரச குடும்பத்தாரின் மனைவிமார்களும் தீயிற் குளித்துத் தங்கள் தங்கள் கணவர் சென்ற நெறியிற் சென்றார்கள்.

ஸைதுல்லாகானுக்கு அவற்றைக் கேட்ட மாத்திரத்தில் மறுபடியும் மனம் கலங்கத் தொடங்கிற்று. ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. முடிவில் தோன்றமல்லன் வந்து தேற்ற ஒருவாறு தெளிந்து பரிகாரத்தின் பொருட்டுப் பல மசூதிகளை யெழுப்பியும் தருமங்களைச் செய்தும் ஒருவாறு ஆறுதலடைந்தான்.

முற்றிற்று.

---

PRINTED AT THE GANESA PRESS
VEPERY, MADRAS. 1922.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 37 | 10 | ஜயசிங்குக்கு | ஜயஸிங்குக்கு |
| 40 | 7 | டில்வி | டில்லி |
| 40 | 13 | எனக்கும்தான் | எனக்கும்மருமகன்தான் |
| 78 | 11 | பனையின | பனையின் |
| 78 | 23 | கதிரவியங்களாலும் | திரவியங்களாலும் |
| 80 | 28 | படைவீரர்களோடு | படைவீரர்க |
| 83 | 7 | அவசியமானது | அவசியமானவை |
| 86 | 14 | வெகு சிறப்பாக் | வெகு சிறப்பாக |
| 88 | 3 | ஜயங்ஸிகு | ஜயஸிங்கு |
| 91 | 17 | யெதிர்ந்து | யெதிர்த்து |
| 95 | 26 | தலையளிகரும் | தலையளிக்கும் |
| 96 | 13 | படைகளைக | படைகளைக் |
| 102 | 26 | கடவில் | கடலில் |
| 103 | 20 | உலகத்தி | உலகத்தில் |

## வாழ்குடை, வேங்கடராமசாஸ்திரிகள்

### இயற்றிய அருமையான ஸ்கூல் புத்தகங்கள்

---

துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டுப்
பல வுபாத்தியாயர்களால் ஆதரிக்கப்பட்டும் வருகின்றன.

---

*பிரதம பாடசாலை* (Primary School) *மாணவர்களின் உபயோகத்தை நினைந்தும், இக்காலத்து வித்தியா விசாரணைத்தலைவர்கள் 'சிறுவர் சிறுமிகளுக்குக் கதைவாயிலாகவே நீதிகளைக் கற்பிக்க வேண்டுமென்றும், நீதிகள் அவர்கள் மனத்திற் பதிந்து பயன் தருவதற்கு அதுவே சிறந்த மார்க்கமென்றும்' அபிப்பிராயப்படுவதைத் தழுவி* உலகநீதி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, நல்வழி *என்ற ஐந்து புத்தகங்களுக்கும் உரையும் கதைக்குறிப்பும் எளிய நடையில் எழுதி வெளிப்படுத்தியிருக்கிறோம்.* பிள்ளைகளுக்கு நீதி மத சம்பந்தங்களான சரித்திரங்களைக் கற்பிப்பதற்கு இவைபோன்ற சிறு நூல்கள் இன்றியமையாதன.

ஒவ்வொன்றும் விலை அணா 6

---

## *ச ந் த நு*

---

*இளைஞர்மனம் கதைப்புத்தகங்களைப் படிக்கக் குதூகலிக்குமென்பது வெளிப்படை. இஃது ஒரு அருமையான தமிழ்க்கதை. பிள்ளைகளுக்குத் தன்னல மறுப்பையும் நன்னிலையொழுக்கத்தையும் கற்பிக்கக்கூடியது. புராண கதைகளிற் சிலவற்றைத் தொடர்ச்சியாகப் புனைந்தெழுத வேண்டுமென்ற பலர் விருப்பத்துக்கிணங்கி இந்தப்புத்தகத்தைப் பிரசுரப்படுத்தி யிருக்கிறது. செய்யுட்பாடத்தின்பொருட்டுக் கடைசியில் நளவெண்பாவின் சுருக்கம் சேர்த்திருக்கிறது.*

விலை அணா 6

## திருக்குறளும் கதைக்குறிப்பும்

### முதற்புத்தகம்

### அறத்துப்பால். அதிகாரம் 1—38.

உயர்தரப் (Secondary) பாடசாலை மாணவர்களுக்கு வியாசம் இன்றியமையாததனை நினைந்து திருக்குறளின் ஒவ்வொரு அதிகாரத்துக்கும் அவ்வவ்வதிகார விஷயத்தைப்பற்றின வியாசமும். இறுதியில் அதற்குத் தொடர்புள்ள புராணகதையும் சேர்த்து வெளிப்படுத்தி யிருக்கிறோம். க்ரௌன் 160 பக்கங்கள் கொண்டது. உயர்ந்த கிளேஸ்காகிதத்தில் அச்சிட்டு அழகாகப் பயிண்டு செய்யப்பட்டிருக்கிறது. துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டது.

விலை அணா 12

---

## திருக்குறளும் கதைக்குறிப்பும்

### இரண்டாவது புத்தகம்

### பொருட்பால். அதிகாரம் 39—73.

(அச்சில்) விலை அணா 12

அக்டோபர் மாதத்தில் வெளிவரும்.

---

## திருக்குறளும் கதைக்குறிப்பும்

### மூன்றாவது புத்தகம்

### பொருட்பால். அதிகாரம் 74—108.

(அச்சில்) விலை அணா 12

அக்டோபர் மாதத்தில் வெளிவரும்.

---

ஔவையார் அருளிச்செய்த மூதுரையும் கதைக்குறிப்பும்

விலை அணா 6

அக்டோபர் மாதத்தில் வெளிவரும்.

---

கே. பழனியாண்டிபிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

## இந்நூலாசிரியரின் பிரசுரங்கள்

* *Approved by the Text-Book Committee.*

எலிமெண்டரி ஸெகண்டரி பாடசாலை இளைஞர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் பயன்படக் கூடியன. இன்ஸ்பெக்டர் முதலிய வித்தியா இலாகா அதிகாரிகளாற் சிறந்தவையென்று ஒப்புக்கொள்ளப்பட்டுத் தமிழ்நாடுகளில்வழங்கி வருகின்றன.

| | |
|---|---|
| * உலகநீதி உரையும் கதைக்குறிப்பும் ... அணா. | 6 |
| * ஆத்திசூடி உரையும் கதைக்குறிப்பும் ... | 6 |
| * கொன்றைவேந்தன் உரையும் கதைக்குறிப்பும் | 6 |
| * வெற்றிவேற்கை உரையும் கதைக்குறிப்பும் ... | 6 |
| * நல்வழியும் கதைக்குறிப்பும் ... | 6 |
| * சந்தரு ... | 6 |
| * ஜயஸிங்கு (தேசிங்கு ராஜன்) ... | 8 |
| * ஸத்ய விஜயம் (ஒரு நாடகம்) ... | 12 |
| * திருக்குறளும் கதைக்குறிப்பும் (அறத்துப்பால்) ஒவ்வொரு அதிகாரத்துக்கும் கதைக்குமுன் தெளிவான காம்பொஸிஷன் எழுதப்பெற்றது. 3-ம் பதிப்பு | 12 |

விலாசம்:—கே. பழனியாண்டி பிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி, சென்னை.